கழக வெளியீடு: உசகூ

கலித்தொகைச்

# சொற்பொழிவுகள்

[1940 மார்ச்சு 9, 10 ஆம் நாட்களில் சென்னையில் நடைபெற்ற கலித்தொகை மாநாட்டில் நிகழ்ந்தவை.]



: கலித்தொகை மாண்பு :
: முல்லைக் கலி :
: குறிஞ்சிக் கலி :
: பாலைக் கலி :
: மருதக் கலி :
: நெய்தற் கலி :



:: திருநெல்வேலி, தென்னிந்திய ::
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி, :: சென்னை 1.

முதற்பதிப்பு : மார்ச்சு, 1940.
இரண்டாம் பதிப்பு : ஏப்பிரல், 1943.
மூன்றும் பதிப்பு : பிப்பிரவரி, 1950.



*Published by :*

**THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS PUBLISHING SOCIETY, TINNEVELLY, LTD.,**
**1/140, BROADWAY :: MADRAS 1.**

அப்பர் அச்சகம், சென்னை 1.

# முன்னுரை

சங்க இலக்கியங்களின் மாண்பு, தமிழ் நாட்டில், வர வர விளக்கமுற்று வருகின்றது. நூல்களின்மேல் மாநாடுகள் கூடி, அந்நூல்களைப்பற்றி ஆராய்ந்து அறிஞர்கள் சொற்பொழிவு நிகழ்த்துதல் மேலும்மேலும் அவ்விளக்கத்துக்கு இடஞ்செய்கிறது.

அம்முறையில், மார்ச்சு 9, 10-ம் நாட்களில் (1940) சென்னையில், ஆசிரியர், ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள் தலைமையில், கலித்தொகை மாநாடு கூட, அந்நூலில் வரும் பாலை, குறிஞ்சி, மருதம், முல்லை, நெய்தல் என்னும் ஐந்து பகுதிகளைப்பற்றியும் முறையே, ஞானம்பாள் அம்மை, எம். ஏ., வித்துவான் மா. இராச மாணிக்கம் பிள்ளை, பி. ஓ. எல்., வித்துவான் மு. வரதராசனர், பி. ஓ. எல்., வித்துவான் E. K. நடேச சர்மா, இளவழகனர் என்னும் தமிழறிஞர் ஐவரும் விரிவுரை நிகழ்த்தினர்.

இந்தச் சொற்பொழிவுகளைத் தலைவர் முன்னுரையுடன் ஒரு நூலாக வெளியிட்டால், கூட்டத்திற் கேட்டவர்க்கும் கேட்க நேராத பிறர்க்கும் எப்போதும் பயன்படும் என்று அன்பர்கள் விரும்பினர். அதனல், அவற்றைத் தொகுத்துக் **கலித்தொகைச் சொற்பொழிவுகள்** என்னும் பெயருடன் இந்நூலை வெளியிட்டிருக்கிறோம்.

எமது வேண்டுகோட் கிணங்கித் தமக்குள்ள பல அலுவல்களுக்கிடையே தத்தம் சொற்பொழிவுகளை விரைந்தெழுதி யுதவிய தலைவரவர்களுக்கும், சொற்பொழிவாளர்களுக்கும் எமதன்பார்ந்த நன்றியைப் பெரிதுந் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

கலித்தொகையைக் கற்க விரும்புவார்க்கும், ஆராய்ச்சியாளர்க்கும் இச் சொற்பொழிவுநூல் உதவியாயிருக்குமென்பது எமது கருத்து.

சென்னை,<br>9—3—40. } சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# பொருளடக்கம்



மு. வரதராஜன்.



இளவழகனர்



மா. இராசமாணிக்கம்



ஆசிரியர் ந. மு. வேங்கடசாமி நாட்டார்



E. K. நடேச சர்மா



ஞானம்பாள், எம்.ஏ.

# கலித்தொகைச் சொற்பொழிவுகள்



## க. கலித்தொகை மாண்பு

[ஆசிரியர் ந. மு. வேங்கடசாமி நாட்டார்]

உலகின்கண் எல்லா உயிர்களும் இன்பத்தை விழைகின்றன. எனினும், மக்களொழிந்த ஏனைய உயிர்கள் யாவும் உணவும் இணைவிழைச்சும் முதலியவற்றால் என்றும் ஒரு பெற்றியே சிறுச்சிறு இன்பந் துய்த்துவருதலன்றி, அவ் வின்பத்தைப் பெருக்கவும், ஏனைத் துன்பத்தைத் தவிர்க்கவும் வகையறியாதனவா யுள்ளன. மக்கள்மட்டுமே தம் பகுத்தறிவுகொண்டு முயன்று பொருளீட்டியும் அறம் புரிந்தும், அவை சார்பாக இவ்வுலகில் நுகரும் இன்பத்தை மேன்மேற் பெருகச்செய்தற்கும், மறுமையின்பினையும் என்றும் நிலையாய வீட்டின்பினையும் எய்துதற்கும் உரியராகின்றனர். எனவே மக்களாலெய்தலாகும் பேறுகள் இன்பம், பொருள், அறம், வீடு என்னும் நான்குமாதல் பெற்றாம். ஈண்டு இன்பம் என்றது இம்மையின்பமாகும். இந் நான்கினையும் அகம், புறம் என இருவகைப் படுத்துரைப்பது தமிழ்நூன் முறை. அகப்பொருளாவது இன்பம். ஏனைய புறப்பொருள் எனப்படும்.

இம் மலர்தலை யுலகில் மக்கள் துய்க்கும் இன்பம் பலதிறத்தவாயினும், அவை பலவற்றுள்ளும் உலக வளர்ச்சிக்கும் உயிர்களின் மலர்ச்சிக்கும் இன்றியமையாததும், ஒருகாலத் தொரு பொருளால் ஐம்புலனும் நுகர்தற் சிறப்புடையதுமாகிய காமவின்பமே நூலோரால் இன்பமெனவைத்

துப் போற்றப்படுகின்றது. ஒத்த அன்புடைய ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பம், அக் கூட்டத்தின் பின்னர் ஒருவர்க்கொருவர் புலனாக இவ்வா றிருந்ததெனக் கூறப்படாது யாண்டும் உள்ளத்துணர்வே நுகர்ந்து இன்பமுறுவ தொன்றாகலின், அஃது அகப் பொருள் எனப்படுவதாயிற்று. இவ்வின்பத்தினை எத் துணையும் விழுமிதாச்சுதற்குத் தொல்லை நல்லாசிரியன் மார் கண்ட வித்தகத் திறங்கள் பல. அவை அனைத்தும் 'புலனெறிவழக்கு' என்பதில் அடங்கும்.

புலனெறிவழக்காவது, உலகத்து ஆடவரும் மகளி ரும் உலகியலாற் கூடியொழுகும் ஒழுக்கத்துடன் நாடக வழக்காய புனைந்துரையும் சேர்த்துப் புலவராயினார் செப் பஞ் செய்தமைத்ததோர் திப்பிய நெறி. புலனெறி வழக் கிலே ஒத்த அன்புடைய தலைவனுந் தலைவியுங் கூடி யொழு கும் ஒழுக்கம் 'களவு' எனவும் 'கற்பு' எனவும் இருவகைப் படும். அவற்றுள் களவாவது உருவும், திருவும், பருவ மும், குலனும், குணனும், அன்பும் முதலியவற்றால் ஒத்த தலைமகனும், தலைமகளும் அடுப்பாருங் கொடுப்பாருமின் றிப் பால்வகையால் தாமே எதிர்ப்பட்டுக் கூடி யொழுகு வது. கற்பாவது அவ்விருவரும் முறைப்படி வரைந்து கொண்டு இல்லிருந்து அறம்புரிந் தொழுகுவது. இவ் விருதிறத்தும் தலைமக்கள் ஒழுக்கம் புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் என ஐவகைப்பட்டு நிகழு மென்பதும், அவை முறையே குறிஞ்சி, பாலை, முல்லை, நெய்தல், மருதம் என்னும் ஐந்திணைக்கும் உரியவாமென் பதும், அகத்திணைகள் முதல், கரு, உரி எனப் பாகுபா டெய்துமென்பதும், களவொழுக்கமானது இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற்கூட்டம், தோழியிற் கூட்டமென நால்வகையான் நிகழுமென்பதும், களவின்

கண் தலைவி தோழிக்கும், தோழி செவிலிக்கும் என்னும் இம்முறையானே அறத்தொடு நிலை நிகழுமென்பதும், இரு கைகோளினும் கூற்று நிகழ்த்துதற்குரியார் இன்னின்னார் என்பதும், அவர் இன்னின்ன நெறிப்பாடுடையர் என்பதும், தலைவற்கு இவ்விவ்வேதுவாற் பிரிவு நிகழும் என்பதும், அவன் மீண்டு வரும்பொழுதும் முறைமையும் இவ்விவை என்பதும், பிறவும் புலநெறிவழக்கிடைக் காணப் படுகின்றன.

'இறையனா ரகப்பொருள்' உரையாசிரியர் இதனை 'இல்லது இனியது நல்லது என்று புலவரால் நாட்டப் பட்டதோ ரொழுக்கம்' என்றே பலவிடத்தும் வற்புறுத்திச் சொல்லாநிற்பர். ஏனினும் உலகியலும் புனைந்துரையும் விரவியதே புலனெறிவழக்காமெனல் ஆசிரியர் தொல்காப்பியனாரின் கருத்தென்பது, 18 DEC 1961

"நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலனெறி வழக்கம்"

என்பதனாற் பெறப்படும். இதன் உரையில் ஆசிரியர் நச்சினார்க்கினியர், "புனைந்துரை வகையிற் கூறுப வென்றலின் புலவர் இல்லனவும் கூறுபவாலோவெனின், உலகத்தோர்க்கு நன்மை பயத்தற்கு நல்லோர்க் குள்ளனவற்றை ஒழிந்தோர் அறிந்தொழுகல் அறமெனக் கருதி, அந் நல்லோர்க் குள்ளனவற்றிற் சிறிதில்லனவும் கூறுதலன்றி, யாண்டும் எஞ்ஞான்றும் இல்லன கூறார்" என்றுரைப்பது சிந்திக்கற்பாலது.

இவற்றிலிருந்து, களவுக்கூட்டமென்பது தமிழ்நாட்டு ஐந்திணை மக்களிடம் இயல்பாக நிகழ்ந்துவந்ததொன் றென்பதும், அவர்கள் முதற்கண் களவில் அளவளாவி யிருந்து பின் வரைந்துகொள்ளும் ஒழுகலாறுடையர்

என்பதும், இவற்றை அடிப்படையாகக்கொண்டு நல்லிசைப்புலவர்கள் சுவை பயப்பனவாகிய கருத்துக்கள் பலவற்றைத் தொகுத்துப் புலனெறிவழக்கினை அமைத்துள்ளாரென்பதும் கருதற்பாலவாகின்றன. மலைநாட்டு முதுவர் முதலாயினார்பால் இஞ்ஞான்றும் காணப்படும் ஒழுகலாறுகள் இக்கருத்தினை வலியுறுத்துவனவாகும். களவுக்கூட்டம் புலனெறியன்றி உலகியலானும் ஐந்திணை மக்களிடை நிகழ்தலுண்டென்னுங் கருத்தினர் நச்சினார்க்கினிய ரென்பது,

"முதலொடு புணர்ந்த யாழோர் மேன
தவலருஞ் சிறப்பி னைந்நிலம் பெறுமே"

என்னும் களவியற் சூத்திரத்திற்கு அவருரைத்த உரையானறியப்படும். மலைவாணரிடம் இவ்வொழுக்கம் பெருவழக்கமாயினமைகொண்டே தொல்லாசிரியன்மார் குறிஞ்சிக்கண் புணர்ச்சியை அமைத்தனர்போலும். எனினும் கூடுதல் முதலிய உரிப்பொருள்கட்கு நிலமும் காலமும் வரையறை செய்திருப்பதில் நாடக வழக்கு இயைந்துள்ளமை தேற்றம்.

இவ்வாறு புலனெறியிற் புனைந்துரைகள் புகுத்தப்பட்டமையின் நோக்கம் தலைமக்களின் அகவுணர்ச்சியாகிய அன்பினைப் பலவாறும் வெளிப்படுத்துதலேயாதல் வேண்டும்.

ஐந்திணை யொழுக்கமானது அன்பின் பாலதென்பது,

"அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கிற்
காமக் கூட்டங் காணுங் காலை"

எனத் தொல்காப்பியமும்,

"அன்பி னைந்திணைக் களவெனப் படுவது"

எனவும்,

"களவு கற்பெனக் கண்ணிய ஈண்டையோர்
உளநிகழ் அன்பின் உயர்ச்சி மேன"

எனவும் இறையனார் களவியலும் கூறுதலாற் போதரும்.

புலனெறிவழக்கிடைக் காணப்படும் தலைமக்களின் வியக்கத்தக்க அன்பின் திறனும், நிலைவியது கற்பின் திண்மையும் முதலாய அக வுணர்ச்சி மேம்பாடெல்லாம் தமிழ் நன்மக்களின் உலகியலான உணர்வொழுக்கவுயர்ச்சியினின்றும் உதித்தனவேயாகும். புலனெறிவழக்கினை யாத்த தமிழ்ப்புலவர்களின் உள்ளத்தே மலர்ந்த அவ்வுயர் பண்புகள் ஏனைத் தமிழ் மக்கள் அகத்தில் முகிழ்த்தில எனல் யாங்ஙனம் அமையும்?

களவொழுக்கமானது ஆரிய மக்களின் எண்வகை மன்றலுள் ஒன்றாய யாழோர் கூட்டத்தை ஒப்பதெனக் கூறப்படுவது, இருவர் தமியராய் எதிர்ப்பட்டுக் கூடுதலாகிய ஒருபுடை ஒப்புமை கருதியே யாகும். யாழோர் கூட்டத்தில் பின் கற்பு நிகழ்தல் ஒருதலையன்று. களவுக் கூட்டமோ கற்பின் இன்றியமையாமையை யுடையது. மற்றும், புலனெறிவழக்கிற் பலவாறும் புகழ்ந் துரைத்தற்கேற்ற உழுவலன்பின் விழுமிய திறனெல்லாம் களவுக்கே சிறப்புரிமையுடையன. "சொற்பா லமுதிவள் யான் சுவையென்ன" என்னும் திருச்சிற்றம்பலக்கோவைச் செய்யுளும், அதற்குப் பேராசிரியர் எழுதிய உரையும் அவ்வன்பின் சிறப்பினை நன்கு விளக்குதல் காண்க. மகளிர்க்கு உயிரினும் நாண் சிறந்ததென்பதும், அதனினுங் கற்புச் சிறந்ததென்பதும் களவியலின் தெளிபொருளாக உள்ளன. இத்தகைய நாணுங் கற்பும் பேணு மடவார் இஞ்ஞான்றும் உளராதல் கண்கூடாதலின் இவை உலகியலாதல் இல்லெனச் சாலாது.

"குடிமுதற் சுற்றமும் குற்றிளை யோரும்
அடியோர் பாங்கும் ஆயமும் நீங்கி
நாணமும் மடனும் நல்லோ ரேத்தும்
பேணிய கற்பும் பெருந்துணை யாக
என்னொடு போந்தீங் கென்றுயர் களைந்த
பொன்னே கொடியே புனைபூங் கோதாய்
நாணின் பாவாய் நீணில விளக்கே
கற்பின் கொழுந்தே பொற்பின் செல்வி"

என்று கோவலன் கூறுவன கண்ணகியின் உண்மைப் பெண்மை நலங்களே யன்றோ? இங்ஙனம் காந்தருவத்தினும் சிறந்த நலங்களோடு தமிழரின் களவுமுறை திகழ்ந்தமையாற்றான் இதனைத் தமிழுக்கே உரியதெனச் சான்றோர் பலரும் கூறுவாராயினரென்க.

பரிபாடலில் குன்றம்பூதனார் பாடிய ஒன்பதாஞ் செய்யுளில்

"நான்மறை விரித்து நல்லிசை விளக்கும்
வாய்மொழிப் புலவீர் கேண்மின்"

என நான்மறைப் புலவரை விளித்துக் களவு, கற்பு என்பவற்றின் இயல்பினையும், அவற்றுள் மெய்யுற்றறியாதாரிருவர் அன்பொத்துப் பான்மை வகையால் தாமே மெய்யுற்றுக்கூடும் காதற்கூட்டமாகிய களவே சிறந்ததென்பதனையுங் கூறி வந்து, இதனை வேண்டும் பொருளிலக்கணத்தையுடைய தமிழை ஆயாதார்க்கு இதன் சிறப்பு விளங்காதென்பார்,

"தள்ளாப் பொருளியல்பிற் றண்டமிழ் ஆய்வந்திலார்
கொள்ளாரிக் குன்று பயன்"

என்று கூறி, இது தமிழுக்கே உரியதாமாறும், அதனால் தமிழ் சிறந்ததாமாறும் வலியுறுத் துரைத்திட்டமை காண்டும்.

மற்றும், பதுமையொடுங் களவிற் கூட்டம் நிகழ்த்த வெண்ணிய சீவகன்,

> "தேவர் பண்ணிய தீந்தொடை யின்சுவை
> மேவர் தென்றமிழ் மெய்ப்பொரு ளாதலின்"

என அதனைத் தென்றமிழின் மெய்ப்பொருளாமெனக் கொண்டான் என்றும், சுரமஞ்சரியும் சீவகனும் களவிற் கூட்டம் நிகழ்த்தினமையை,

'இன்றமிழியற்கை யின்பம் நிலைபெற நெறியிற்றுய்த்தார்' என்றும் திருத்தக்கதேவர் கூறியுள்ளமையும் இது தமிழியலா மென்பதனை வலியுறுத்தாநிற்கும். நச்சினார்க்கினியர் இவற்றைச் சுட்டி ஒருவர் பெயர் கொள்ளப்படுதலின் 'உலகியல் வழக்கான காந்தருவம்' என்பர்.

இதுகாறுங் கூறியவாற்றால் ஐந்திணைப்பாற் படும் அன்பின் விளைவாகிய அகப்பொருளின் சிறப்பு இனிது புலனாகா நிற்கும். ஆயின் உலகத்தில் இருவரிருவராய் இன்பந் துய்க்கும் எல்லா மக்களும்,

> "பிறப்பே குடிமை யாண்மை யாண்டோ
> டுருவு நிறுத்த காம வாயில்
> நிறையே யருளே உணர்வொடு திருவென
> முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே"

எனத் தொல்காப்பியர் கூறிய ஒப்புமை பலவுமுடையராதலில்லை. அடியோரும் வினைசெய்வாரும் முதலாயினார் தமக்குரியரன்றிப் பிறர் ஏவிய வழி ஒழுகுவோராதலின் அவரது அன்பின் நிலையும், இன்பமும் குறைபாடுள்ளனவேயாகும். ஆகலின் அவருடைய இன்ப ஒழுக்கங்கள் தலைமைப்பாடுடைய நன் மக்களின் அன்பொழுக்கங்களோடு ஒரு தன்மையவாகா என்பதுபற்றிப் பண்டைத் தமிழ்ச் சான்றோர்கள் அவற்றிற்குக் கைக்கிளை, பெருந்

திணையெனப் பெயர் கொடுத்து அகப்புறமென ஒருசார் ஒதுக்கிவைப்பாராயினர். ஏனை நன்மக்கள்பால் உலகியலால் நிகழும் ஒருசார் கைக்கிளை பெருந்திணையும் உள. அவையும் அகப்புறமே யாகுமென்க.

இனி, இத்தகைய புலனெறிவழக்குப்பற்றிய செய்யுட்களை புறப்பொருட்செய்யுளினும் மிகுதியாகச் சங்கத்துச் சான்றோரால் இயற்றப்பட்டுள்ளன. புறப்பொருள் முயற்சியில் உழந்து வாட்டமுறும் மக்கள் உள்ளத்தில் இன்புநீர் பாய்ச்சிக் கிளர்ச்சியை விளைப்பதற்கு இஃது ஏற்ற கருவியாதல் கருதிப்போலும் இதனை மிகுத்துப் பாடுவாராயினர்! மற்றும் காட்சிப்பொருளும் கருத்துப்பொருளுமாகிய இருவகைப் பொருளையும் இனிதமைத்துக் கற்பார் நெஞ்சங் காமுறச் செய்யுள் புனைதற்கு இஃது ஏற்ற பெற்றியதாதலும் கருதற்பாற்று.

ஐந்திணையின் பாகுபாடாகிய முதல் கரு உரிப் பொருள்களில் முதற்பொருளாகிய நிலம் பொழுதுகளும் அவற்றைச்சார்ந்து தோன்றும் கருப்பொருளாகிய விலங்கு, புள், மரம், பூ முதலாயினவும், ஆண்டு வாழும் மக்களும், அவர்கள் செய்தொழில் முதலாயினவும் காட்சிப்பொருளாம். உரிப்பொருளாகிய புணர்தல், பிரிதல் முதலியனபற்றி அகத்தே தோன்றும் உணர்ச்சி வகைகள் கருத்துப்பொருளாம்.

“ஒப்பும் உருவும் வெறுப்பும் என்று
கற்பும் ஏரும் எழிலும் என்ற
சாயலும் நாணும் மடனும் என்று
நோயும் வேட்கையும் நுகர்வும் என்றுங்
காவயின் வரூஉங் கிளவி யெல்லாம்
நாட்டிய மரபின் நெஞ்சுகொளி னல்லது
காட்ட லாகாப் பொருள வென்ப”

என்னும் பொருளியற் சூத்திரத்துக் கிளந்தோதிய ஒப்பு முதலியனவும், 'எல்லாம்' என்பதனால் உரையகத்தே நச்சினார்க்கினியர் எடுத்துக் காட்டிய ஒளி, அளி, காய்தல், அன்பு, அழுக்காறு, பொறை, நிறை, அறிவு முதலாயினவும் கருத்துப் பொருளாமாறு ஓர்க.

இறையனாரகப்பொருளுரையாசிரியரும், "உலகத்துப் பொருள்தான் இரண்டு வகையா னுணர்த்தப்படும். உண்மை மாத்திரை உணர்த்திப் பிழம்பு உணர்த்தப்படாதனவும், உண்மையும் பிழம்பு முணர்த்தப்படுவனவுமென" என்று கூறி அவற்றுள் உண்மை உணர்த்திப் பிழம்புணர்த்தப் படாதனவற்றுக்குக் காமம் முதலியவற்றையும், 'ஒப்பும் உருவும்' என்னும் சூத்திரத்துக் கூறப்பட்டவற்றையுமே எடுத்துக் காட்டினார். இவையெல்லாம் பிழம்புணர்த்தப் படாத வாயினும் நல்லிசைப் புலவர் தாம் சொல்லுந் திறங்களால் இவற்றை நம் நெஞ்சிலே நிறுத்துகின்றனர். பொறிகளாற் காண்டற் குரியவாகிய இயற்கைப் பொருள்கள் பலவற்றின் திறங்களையும் நுனித்தறிந்து கூறுவதிலும், கருத்துப் பொருளாய அன்பு முதலிய உணர்ச்சிகளை வெளிப்படுத்துவதிலும், சங்கப் புலவர்களின் வித்தகக் கவித்திறம் எத்துணையும் பாராட்டற்குரியதாம்.

பல்வேறு காலத்திருந்த புலவர்கள் பலரால் பாடப் பட்டனவும் கடைச்சங்கத் திறுதிநாளிற் சான்றோர் சிலரால் ஒவ்வொரு முறைபற்றித் தொகுக்கப்பட்டனவும் ஆகிய எட்டுத் தொகையுள் ஒன்றாயது **கலித்தொகை.** இஃது அகப்பொருளாய புலனெறி வழக்கையே பொருளாக உடையது; முழுதுங் கலிப்பாவானமைந்தது. ஆசிரியர் நல்லந்துவனாரால் பாலை, குறிஞ்சி, மருதம், முல்லை, நெய்தல் என்னும் இம்முறையே தொகுத்து நிறுத்தப் பெற்றது. இதில் உள்ள பாலை முதலிய ஐந்து பகுதிகளும்

முறையே பெருங் கடுங்கோன், கபிலர், மருதனிளநாகனார், நல்லுருத்திரன், நல்லந்துவனார் என்போரால் பாடப்பெற்றன என்பது ஓர் வெண்பா வாலறியலாவது. இவ்வைந்து பகுதிகளிலும் பாண்டியர் குடியும், பாண்டியர்க்குரிய பதி, யாறு, மலைகளாகிய கூடல், வையை, பொதியில் என்பனவும், பிறவும் பாராட்டப்பட்டிருத்தலின் இவற்றை இயற்றிய ஆசிரியர் வரலாறு ஆராய்ந்து அறுதியிடப்பெறல் வேண்டும். இனி, கலித்தொகையென்னும் இவ்விலக்கியத்தின் சிறப்பு அளவிடற்கரிய தொன்றாகும். புலனெறி வழக்கினைப் பாடுதற்குச் சிறப்புரிமையுடைய செய்யுள் கலியே யென்பது,

“ நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலனெறி வழக்கம்
கலியே பரிபாட் டாயிரு பாங்கினும்
உரிய தாகு மென்மனார் புலவர் ”

என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தால் அறியப்படும். செய்யுளியலிற் கூறிய முறையன்றிக் கலியை முற்கூறியது பரிபாட்டினும் அது சிறந்தது என்பதனைப்புலப்படுத்தும். கலியுள்ளும் சிறப்புடைய ஒத்தாழிசைக் கலியே பலவாகவும் ஏனைய சிலவாகவும் இத்தொகையில் அமைந்துள்ளன. இன்பம் பற்றிய எக்களிப்பு அல்லது மனவெழுச்சிக்குக் கலியின் துள்ளலோசை பொருத்தமுடைத்தாகலின் ஆசிரியர் புலனெறி வழக்கிற்கு இதனையே சிறந்ததெனக் கொண்டாராதல் வேண்டும். மற்றும் தரவு, தாழிசை முதலிய கலியுறுப்புக்கள் புலனெறிவழக்கிற் கூற்று நிகழ்த்துதற்குரியார் ஒருவர் மற்றொருவர்க்கு ஒன்று கட்டுரைக்குமிடத்து அக்கருத்தினைத் தொகச் சொல்லியும் தூவாத நீக்கி வகுத்துரைத்து வலியுறுத்தியும், முடிவின்கண் பயனால் நகச்சொல்லியும் நன்றி பயத்தற்கேற்ற

வெவ்வேறு ஓசையும் அமைப்பும் உடையவாகத் திகழ்தலும் இதனது சிறப்புரிமைக்கு ஏதுவாதல் வேண்டும்.

இனி, இக்கலிச் செய்யுளெல்லாம் சங்கு திரண்டு முரன்றெழும் ஓசைபோலத் தழைந்து இன்பம் பயக்கும் ஓசை நல முடையனவாக, அவற்றில் அமைந்துள்ள பொருள்வளமும், கருத்து மாண்பும் அளவிடற்கரிய சிறப்பினவாய்த் திகழ்கின்றன. இத்தொகையின்கண் ஐந்திணையின் கருப்பொருள்களின் இயல்களும், ஆண்டு வாழும் மக்களின் பெற்றிமைகளும் கிழியில் எழுதிக் காட்டினுலொப்ப அழகுறத் தெளிந்து தோன்றுகின்றன. இதிலுள்ள உவமங்களின் மாட்சி யொன்றே இதனை இணையற்ற சிறப்பினதாக்கும் தகுதிப்பாடுடையது. ஆயின் இன்பம் நுதலி எழுந்த இதன்கண் பாலையின் கொடுமை பலபடியாகக் கூறப்படுதல் துன்ப நினைவை யெழுப்பி இன்ப வெழுச்சிக்கு ஊறு செய்வதாகுமாலோ எனின், ஆகாது. என்னை? தலைவனது மீட்சியின்கண் அவ்வின்பம் முன்னையினுஞ் சிறந்து தோன்றுமாகலின் என்க. அல்லதூஉம் தலைமகன் தன் கடப்பாடுகளை ஆற்றுதற்கண் எத்தகைய துன்பங்களையும் பொறுக்கு மியல்பினன் என்பதனை நாட்டுதற்கும், தலைவனைப் பிரிந்த தலைவியின் தலையன்பு பற்றிய அகவுணர்ச்சிகளைக் காட்டுதற்கும், தலைவன் பிரிந்துசெல்லும் பாலையின் கொடுமை கூறல் பெரிதும் பயப்பாடுடையதாதலும் காண்க. தலைவியைப் பிரிந்து வேற்றுநாட் டகலும் தலைவனொருவன் யாண்டும் வெம்மை மிக்க ஆரதரத்தம் நடந்து சேறல் உலகியலில் ஒருதலையன்றாயினும், முற்குறித்த பயன் கருதியே தொல்லாசிரியர் நாடக வழக்குப்பற்றி இதனை அமைத்தாராகல் வேண்டும். அங்ஙனம் இறப்ப இன்னாதவற்றை உரைக்க வேண்டிய இடத்தும் நல்லிசைப் புலவர்கள் தம் சொல்லுந்

திறத்தால் அவற்றிற் கினிமை யூட்டிக் கற்பவர் காமுறு மாறு செய்துவிடுகின்றனர்.

இனி, தூயதொரு காதலின்பம் துய்க்கும் இவருள் தலைவனானவன் பரத்தையிற் பிரிந்தொழுகும் ஒழுக்கமும் இழிவு தரும் நீரதாகவே தோன்றுகிறது. இஃதுலகியல் போலப் புலனெறியினும் நாடகவழக்குப் பற்றியே புலமை மிக்கார் இதனைப் புகுத்துரைத்தாராதல் வேண்டும்.

இனி, தூயதொரு காதலின்பம் துய்க்கும் இருவருள் தலைவனானவன் பரத்தையிற் பிரிந்தொழுகும் ஒழுக்கம் மதிக்கண் மறுப்போல்வ தொன்றாய்த் தோன்றுகின்றது. இவ்வொழுக்கமானது புலனெறி வழக்கிற் காணப்படுவது பேருரையாசிரியர்களின் உள்ளத்தைத் திகைக்கச் செய்துளதென்பது அன்னோர் பன்னெறிப்பட இதற்கு அமைதி கூறுந் திறத்தான் அறியப்படும்.

"காதற் பரத்தை எல்லார்க்கு முரித்தே"

என்னும் இறையனாரகப்பொருட் சூத்திர வுரையில் ஆசிரியர் நக்கீரனார் பரத்தையிற் பிரிவு நிகழ்தற்கு ஏது வாகக் கூறப்படும் பல கருத்துக்களை ஆராய்ந்து கழித்துப், புணர்ந்துறை வகையால் ஓர் கருத்தினை நிறுவி, இறுதியில், "பரத்தையிற் பிரிந்தான் தலைமகன் என்றால் ஊடலே புலவியே துனியே என்றிவை நிகழும். நிகழ்ந்தால் அவை நீக்கிக் கூடினவிடத்தும் பெரியதோரின்பமாய் அவ்வின்பத் தன்மையை, வெளிப்படுப்பன அவையெனக் கொள்க" என்று முடிக்கின்றனர்.

திருச்சிற்றம்பலக் கோவையாரின் உரையில் பேரா சிரியர் "பரத்தையிற் பிரிவென்பது தலைமகளை வரைந்தெய் திய பின்னர் வைகலும் பாலே நுகர்வானொருவன் இடையே புளிங்காடியும் நுகர்ந்து அதன் இனிமையை

நுகர்ந்தாற்போல, அவள் நுகர்ச்சியின் இனிமை யறிதற்குப் புறப்பெண்டிர்மாட்டுப் பிரியாநிற்றல். அல்லதூஉம் பண்ணும் பாடலும் முதலாயின காட்டிப் புறப்பெண்டிர் தன்னைக் காதலித்தால் தான் எல்லார்க்கும் தலைவனாதலின் அவர்க்கும் இன்பஞ் செய்யப் பிரியாநிற்றல் என்றுமாம். அல்லதூஉம் தலைமகளை ஊடலறிதற்குப் பிரிதல் என்றுமாம்" என்று கூறுநிற்பர். இவையெல்லாம் பரத்தையிற் பிரிவென்பது நாடக வழக்குப்பற்றி அமைக்கப் பட்டதென்னும் கருத்தினை உட்கொண்டு, அங்ஙனம் அமைக்கப்படுதற்கு ஏதுக்களை ஆராய்ந்தவாறேயாம். வரைவின் மகளிரொடு மருவியொழுகும் பூரிய வொழுக்கம் செல்வர் சிலரிடை உலகியலாற் காணப்படினும், சீரியராகும் தலைமக்கள் அதனை உடையராதல் ஒருதலை யன்றே; ஆதலான், சில பயன் கருதிப் புலவராயினார் இதனைப் புனைந்துரைத்தனரென்றே கோடல் வேண்டும். அப் பயன்களுள், தலைவன் எத்துணைக் கொடுமை செய்யினும் தலைவி தன் கற்பினின்றும் சிறிதும் கலங்குதல் இலளாவள் என்பதனை வெளிப்படுப்பதே தலையாயதாகும். மாணிக்கவாசகப்பெருமான் கூடலிலுயர்ந்த தீந்தமிழ்க் கடலிற் படிந்து கொழித்தெடுத்த அரும்பெறன் மணிகளுள் ஒன்றாய,

"வேயாது செப்பி னடைத்துத் தமிவைகும் வீயினன்ன
தீயாடி சிற்றம் பலமனையாள் தில்லை யூரனுக்கின்
றேயாப் பழியென நாணியென் கண்ணிங்ங னேமறைத்தாள்
யாயா மியல்பிவள் கற்புநற் பால வியல்புகளே"

என்னும் கோவைச் செய்யுளில், தலைவனது பரத்தைமை யொழுக்கத்தால், வேயாது செப்பினடைத்த பூப்போலத் தலைவியின் மெய் வாடியும் தலைவனுக்கு ஒவ்வாப் பழி வருமென்று அஞ்சி, அவள், அவனது கொடுமையைத் தன் ஆரு

யிர்த் தோழிக்கும் மறைத்தலாகிய கற்பின் பொற்பு இனிது விளக்கப்படுதல் காண்க.

இனி, மிடாச் சொன்றிக்கு ஓர் அவிழ்பதமாம் என்னும் முறையால் கலித்தொகைப் பொற்பேழையகத்து ஒளிவிடும் கதிர்மணிக் குவையுள் ஒரு சில காட்டி இவ்வுரை முடிக்கப் பெறும்.

பாலைக்கலி யுள்ளே, சுரத்தின் வெம்மையைக் குறித்தற்கு,

"உண்ணீர் வறப்பப் புலர்வாடு நாவிற்குத்
தண்ணீர் பெறுஅத் தடுமாற் றருந்துயரம்
கண்ணீர் நனைக்கும் கடுமைய காடு"

என்றும்,

"இன்னிழ லின்மையால் வருந்திய மடப்பிணைக்குத்
தன்னிழலைக் கொடுத்தளிக்கும் கலை"

என்றும் கூறுவன நெஞ்சினை உருக்குந் திறத்தன. இவற்றின்கண் அவலமேயன்றி, அருளும் தோன்றுகின்றன. பின்னதன்கண், காட்டகத்து வாழும் விலங்கும் இத்தகைய பேரன்பின தாகலின் அதனை யறிந்து தலைவியைத் தலையளி செய்தற்குத் தலைவன் வாராதிரான் என்னுங் கருத்து வலியுறுத்தப்படுகின்றது.

"வீறுசால் ஞாலத்து" என்னுஞ் செய்யுளில், இளவேனிற் காலத்து யாறு தன்னாலே வளம்பெற்ற நாட்டின் பொற்பினைக் கண்விழித்துக் கண்டாற்போல் அதன் மருங்குள்ள கயங்கள் விளங்குகின்றன என்றும், பளிக்குக் கண்ணாடியினுள்ளே பவழம் பதித்தாற்போலச் காம்பினின்று கழன்று உதிர்ந்த முருக்கின் சேயிதழ்கள் குளத்து நீரிடைக் காணப்படுகின்றன என்றும் கூறிய உவமங்கள் மருட்கையும் மகிழ்ச்சியும் விளைப்பன.

குறிஞ்சிக் கலியிலே, 'கானவன் யானைமீது வீசிய கவண்கல் வேங்கையின் பூவைச் சிதறி, ஆசினி மென் பழத்தை உதிர்த்து, தேனின் இறாலைத் துளைப்படுத்து, மாவின் குலையை உழக்கி, வாழையின் மடலைக் கிழித்து, பலவின் பழத்துட் சென்று தங்கும்' எனக் குறிஞ்சியின் கருப்பொருள் பலவற்றைச் சிறப்புற எடுத்தடுக்கி, அவற்றின் கண் அகப்பொருள் ஒழுக்க நிகழ்ச்சிகளை உள்ளுறுத் தமைத்திருக்கும் திறப்பாடு பாராட்டற் குரியது.

மருதக்கலியில்,

"காதல்கொள் வதுவைநாட் கலிங்கத்துள் ஒடுங்கிய
மாதர்கொள் மானோக்கின் மடந்தைதன் துணையாக
ஓதுடை யந்தணன் எரிவலஞ் செய்வான்போல்"

அன்னம் தன் அணிநடைப் பெடையோடு தாமரைத் தனிமலரைப் புறஞ்சூழ்ந்து திரிதரும் என்றமைப்பது இனிமை பயப்பதொன்றாம்.

முல்லைக் கலியிலே, வெள்ளை, காரி, குரால், சேய், சுரி நெற்றிக் காரி, செம்மறு வெள்ளை, ஏந்திமிற் குரால், பல்பொறிப் புகர் என்றிங்ஙனம் நிறம்பற்றி ஏறுகளுக்குப் பெயர் கூறி, அவற்றுக்குப் பலராமன், கண்ணன், முக்கண்ணன், முருகன் என்னும் கடவுளர்களையும், அவர்கள் தரித்துள்ள தார், வளை, மறு, உடை முதலியவற்றையும் பொருந்தவைத்து உவமங் கூறியிருப்பது பாராட்டுந் திறத்தது.

"கொல்லேற்றுக் கோடஞ்சு வானை மறுமையும்
புல்லாளே ஆய மகள்"

என்பதன் கருத்து அறிந்து சுவைத்து இன்புறற்பாலது.

நெய்தற்கலியுள், தலைவனைப் பிரிந்து ஆற்றாமை மிக்குக் கடல், முகில், ஞாயிறு முதலியவற்றை நோக்கித் தலைவி

கூறும் கழிபடர்க் கிளவியெல்லாம் இருப்பு நெஞ்சையும் நெகிழ்க்குந் திறத்தன. ஆற்றுதல், போற்றுதல், பண்பு, அன்பு, அறிவு, செறிவு, நிறை, முறை, பொறை என்னும் பண்புகளை ஒரு செய்யுளில் எடுத்து நிறுத்தி, "ஆற்றுதல் என்பதொன் றலந்தவர்க் குதவுதல்" என்றிங்ஙனம் அவற்றின் கருத்தினை வரையறுத் துணர்த்தி யிருப்பது ஆசிரியரது மாண் புலமைக்குச் சான்றாகும்.

"தம்புகழ் கேட்டார்போல் தலைசாய்த்து மரந்துஞ்ச"

என்று ஆசிரியர் உவமமாகத் தேர்ந்து கூறியதோர் நற்பண்பு நன்மக்கள் உள்ளத்தே என்றும் நின்று நிலவுதற் குரியது.

மற்றும் இக்கலித்தொகையிற் கூறப்பட்டிருக்கும் தலைமக்களின் பண்புகளும், அறநெறிகளும், உலகியல்களும் முதலாயினவெல்லாம் பேருறுதி பயப்பனவாகும். முதல் கரு உரிப்பொருள்களின் இயல்புகளைத் தெளிவுறுக்கு மிடங்களில் வேத்தியல் முதலாய ஏத்தரும் அறநெறிகள் எத்தனையோ பல உவமங்களில் வைத்து அறிவுறுத்தப்பெற் றுள்ளன. மக்களின் மனநிலை, ஒழுக்கம் முதலிய பண்புகளுக்கு மரம், பூ முதலிய பருப் பொருள்களையும், பருப் பொருள்களுக்கு அப் பண்புகளையும் உவமையாக அமைத் திருக்கும் அழகு இதனிற்போல இத்துணை மிகுதியாக வேறெங்கும் காண்ட லரிது. இதனைக் கற்பதில் தம் நெஞ் சினைத் திறை கொடுத்தோரே தமிழின் சுவையை இனிது நுகர்ந்து இன்புறுவோராவர்.

கலித்தொகைக்கு ஆசிரியர் நச்சினார்க்கினியர் எழுதிய உரை விழுமியதொன்று. அவரியற்றிய உரை பலவற்றினும் இது சிறந்தது எனலாம். நுண்மாண் கருத்துக்களை ஆண்டாண்டு ஆய்ந்து வெளிப்படுத்தியும், உள்ளுறையுவ

மங்களைத் தெள்ளிதின் விளக்கியும், செய்யுள்தோறும் மெய்ப்பாடும், பயனும் தெரிவித்தும் இவ்வுரை இயன்றுள்ளது. சில தொடர்களுக்கு வெளிப்படையாகத் தெரியும் பொருளை விடுத்து, விழுமிய பொருள் புகுத்துரைப்பது இவ்வுரையாசிரியர் இயல்பென்பது பலரும் அறிந்த தொன்று. கலியின் கடவுள் வாழ்த்திலுள்ள

"கூறுமற் குறித்ததன்மேற் செல்லும் கடுங்கூளி
மாறுப்போர் மணிமிடற் றெண்கையாய் கேளினி"

என்பதில் 'கூறுமற் குறித்ததன்மேற் செல்லும்' என்பது கூளிக்கு அடைமொழியாய் நின்று, 'கூறவேண்டாமலே கருதிய வினையிற் செல்லும்' என்னும் பொருள் பயப்பது கண் கூடு. தக்கயாகப்பரணி உரையாசிரியர், "இறைவர் தம், மேலே நெற்றி விழிக்க வந்து பணிந்து நின்றனன் வீரனே" என்பதற்கு உரை கூறுமிடத்து, "கூறுமற் . . . கேளினி" என்னும் இப்பகுதியை எடுத்துக் காட்டியிருப்பது அவர் கருத்தும் அன்னதாதலைப் புலப்படுத்தும். ஆயின், நச்சினார்க்கினியரோ, அதனை இறைவனுக்கு அடையாக்கி "மாற்றம் மனம் கழிய நின்றவன்" என்ற கருத்தினைப் புலப்படுத்துகின்றார்.

---

## உ. முல்லைக் கலி

[வித்துவான் E. K. நடேச சர்மா]

### 1. தோற்றுவாய்

எழுத்து, சொல், பொருளெனத் தமிழர்க்கு இலக்கணம் மூவகைத்து. முன்னிரண்டன் இலக்கணத்தை உணர்ந்து பின்னர் அவை கருவியாகப் பொருளை உணர்தல் வேண்டும். 'பொருளாவது, அறம்பொருளின்பமும் அவற்றின் நிலையின்மையும் அவற்றின் நீங்கிய வீடுபேறுமாம்'. அப்பொருள் அகம் புறம் என இருவகைப்படும். அகமாவது, ஒத்த அன்பானே ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற காலத்துப் பிறந்த இன்பம் அக்கூட்டத்தின் பின்னர் அவ்விருவர் ஒருவர்க்கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறிருந்ததெனக் கூறப்படாததாய், யாண்டும் உள்ளத்துணர்வே நுகர்ந்து இன்பமுறுவதோர் பொருள். புறத்து நிகழ்வனவெல்லாம் புறமாம். திணையாவது ஒழுக்கம். திணையென்னுஞ் சொல் பூமி, இடம், வீடு, குலம், ஒழுக்கம் எனப் பல பொருள்களைத் தருமாயினும், ஈண்டு ஒழுக்கம் என்னும் பொருளே சிறந்ததாகும். இதனையே தமிழர் அகத்திணை யென்பர். அகத்திணை யென்பது அகவொழுக்கம்; அதுவே இன்பவொழுக்கம்.

அத்திணை—அவ்வொழுக்கம் ஐவகைப்படும். அவ்வொழுக்கம் நிகழும் இடங்கள் நான்கு. இறைவன் உலகத்தைப் படைக்கின்ற காலத்துக் காடும், மலையும், நாடும், கடற்கரையுமாகப் பகுத்தான். மேற்கூறிய ஐவகை யொழுக்கத்திணையும், நான்கு நிலங்கட்குப் பகுத்துக் கொடுத்தான். அவையே முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்பன. அந்நிலங்களுள் புணர்தல், இருத்தல், இரங்கல், ஊடல் என்பன நிகழும். அவற்றிடையே பிரிவென ஒன்று

நிகழும். அதுவே பாலை. அதனுக்கு ஆசிரியர் நிலங் கூறிற்றிலர்.

புலனெறி வழக்கிடைப் பயின்ற பொருள்கள் முதற் பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என மூவகைப் படும். முதற்பொருள்: நிலமும் பொழுதும். கருப்பொருள்: தெய்வமும், உயர்ந்தோரும், தாழ்ந்தோரும், பறவையும், விலங்கும், ஊரும், பூவும், மரமும், உணவும், யாழும், பண்ணும், தொழிலும். உரிப்பொருள்: புணர்தலும், இருத்தலும், இரங்கலும், ஊடலும், பிரிதலும்.

ஈண்டு அதிகாரப்பட்டது முல்லை. முல்லைக்குத் தெய்வம்: திருமால்; உணு: வரகும் சாமையும்; மா: முயலுஞ் சிறு மானும்; மரம்: கொன்றையுங் குருந்தும்; புள்: கானங் கோழியும், மயிலுஞ் சிவலும்; பறை; ஏறுகோட் பறையும், முரசும்; செய்தி: வரகு களைகட்டலும் அவை அறுத்தலும் கடாவிடுதலும் நிரைமேய்த்தலும் ஏறு கோடலும்; பண்: முல்லை; தலைவன்: குறும்பொறைநாடன்; தலைமகள் பெயர்: கிழத்தி, மனைவி; பூ: முல்லையுந் தோன்றியும்; நீர்: கான் யாறு; ஊர்: பாடியுஞ் சேரியும்; மக்கள் பெயர்: இடையர், இடைச்சியர், ஆயர், ஆய்ச்சியர்.

இப்பகுப்புக்கள் ஏனை மொழியிற் பெறப்படா. இத் துணைச் சிறந்த பகுப்புக்களை மனத்துக்கொண்டேபோலும் இறையனார் அகப்பொருளுரைகாரர் 'இந்நூல் என்னுதலிற்றோ எனின், தமிழ் நுதலியதென்பது' என்றார். அகவொழுக்கம் இன்பவொழுக்கமாயின் 'தமிழ் நுதலியது' என்னுந் தொடர் இன்பத்தை நுதலியது என்னும் பொருளைத் தரும். தரவே, தமிழ் என்னும் சொல்லின் பொருளும் இன்பம் என்பதாயிற்று.

மேற்கூறியவற்றைத் தனித்தனி எடுத்து விரிப்பின் வரம்பின்றிப் பெருகுமாதலின் எடுத்துக்கொண்டபொருள் பற்றி எழுதப்புகுவேன்.

சங்க காலத்திலக்கியங்கள் முப் பகுப்பின. அவை எட்டுத் தொகையும், பத்துப்பாட்டும், பதினெண் கீழ்க் கணக்கும் ஆம். நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கற்றறிந்தார் போற்றுங் கலித் தொகை, அகநானூறு, புறநானூறு என்பன எட்டுத் தொகை நூல்கள். 'கற்றறிந்தார் போற்றும் கலி' என்ற தனால் கலித்தொகையின் அருமை பெருமைகள் விளங்கும். இந்நூல் ஐந்து பகுதியது. கலிப்பாவினால் இயன்றது. நூற் றைம்பது செய்யுட்களைத் தன்னகத்துக் கொண்டது. தொகுத்தோரை யுள்ளிட்டு ஐவர் இந்நூலின் ஆசிரியர்கள். அவருள் புலவர் மூவர். அரசர் இருவர். இதனைக் கலித் தொகை என்பதிலும் இன்பத் தொகை யென்று கூறுவது பெரிதும் பொருந்தும்.

முல்லைக் கலி இந்நூலின் நான்காவது பகுதியாகும். இப் பகுப்பில் கொச்சகக் கலி ஏழும், கொச்சகம் மூன் றும், கலி வெண்பாட்டு மூன்றும், அகப்புறக் கலிவெண் பாட்டொன்றும், உறழ்கலி இரண்டும், கலிவெண்பா ஒன் றுமாகப் பதினேழு இனிய செய்யுட்கள் உள. முல்லைக் கலியின் ஆசிரியரான சோழன் நல்லுருத்திரனார் மாயோன் மேயகாடுறை யுலகத்துச் சிறப்பியல்புகளையும், பழக்க வழக்கங்களையும் வடித்த செந்தமிழ்ச் சொற்களானே சித் திரித்துக் காட்டுகின்றார். இக்கலியில் ஆசுரத்தின் பகுதிய தாய ஏறுகோடற் செய்தி, குடிகட்கு அரசன்மாட் டிருந்த அன்பின் பெருக்கம், தலைவர் தலைவியர் தம்முட் பேசுகின்ற சொற்றிறமுறை முதலியன நன்கு விளங்கும். கருத்துக்கள் கற்போர் நெஞ்சினை அள்ளித், துள்ளித் துள்

ளிச் செல்கின்றன. அதனுனன்றே ஆசிரியர் தொல்காப் பியனுர் கலிப்பா துள்ள லோசை யுடைத்தென்முர். முல் லைக் கலிச் செய்யுளடிகளிற் சில, மக்களின் உயர்ந்த மனப் பான்மையினைத் தெரிவிக்கும். இன்னுஞ் சில, தமிழராவார் படைப்புக் காலந் தொட்டு மேம்பட்டு வருகின்றவர் என்று கூறி அவர் தம் நாகரிகத்தினைப் பிற நாடுகளுக்கு எடுத்துக் காட்டும். வேறு சில, அந் நிலத்து மக்கள் கொண்ட கடவுட் கொள்கைகளை எடுத்துக் காட்டும். மற் றுஞ் சில, சொன்னயம் பொருணயங்களை எடுத்தியம்பும். மயிர் சிலிர்க்கும் கற்பனைகளும், தலைவர் தலைவியர்க் கிடையே நிகழும் சொல்வன்மையும், மக்களின் உடை, அணி, தொழில், வீரம், பண்பு முதலியனவும் இந்நூலில் தொட்ட தொட்ட இடங்களிலெல்லாம் காணப்படும். பிறழ வுணர்ந்து 'இதில் என்ன இருக்கின்றது' என இதழதுக்கு வார்க்கு இந்நூலின்கண் எதுவும் காணப்படாது. தமிழ்ப் பற்றுடையராய்த் தமிழின்பம் நுகர விரும்புவார்க்கே இதன்கண் எப் பொருளுந் தோன்றும். 'விலங்குணர்ச்சிய ராய் இன்பந் துய்ப்பார்க்குத் தக்க நூல்கள் இவை' என் னும் உணர்ச்சியை முன்னர்க்கொண்டு தாம் கொண்ட கருத்தினையே நிறுவப் புகுவார்க்கு இந்நூலும் இது போன்ற ஏனை நூல்களும் ஏமாற்றத்தை அளித்தேவிடும். களவென்பது யாது? கற்பென்பது யாது? தலைவன் எத் தகையோன்? தலைவி எத்தகையாள்? எந்தச் சிறந்த கருத் துக்கள் இங்கே வலியுறுத்தப்படுகின்றன? என்பனவற்றை உணர்வார்க்கு இவ்வகநூல்கள் இன்பத்தினையே தந்து உளத்தைப் பண்படுத்தும். அகப்பொருட் செய்திகளைக் கற்றவர் கூறக் கேட்டு, நூல்களிலிருந்து மேலோட்டாகச் சில செய்திகளை யறிந்து, 'அதன்படியே யாமுஞ் செய்தற் பாலம்' என உண்மையை ஓராது, மணமாகாத காளையரிற்

சிலர், மகளிர் சிலரைத் தலைவியராக மதித்து மன ஒற்றுமை யின்றிச் சில மொழிகளை அவர் முன்னே கூறத் தொடங்கு வரேல் இக் காலத்து நீதிப்பான்மையாற் சிறை செறிக்கப் படுவர். குறுமகளிரும் இற்செறிக்கப்படுவர். இத் தொல்லை கள் நீங்க அகநூல்களைக் கருத்துடன் கற்றல் வேண்டும். அங்ஙனம் கற்கின்றார் அகநூல்களிற் கண்ட தலைவர் தலைவி யரைப் போல நன்னெறிகடவார். அவர் தமக்கிடையே, எத்தகைய உணர்ச்சி இருத்தல் வேண்டுமோ அவ்வுணர்ச்சி யில்லா வழி இரு பாலாரும் ஒருவரை யொருவர் உடன் பிறப்பாளராகவே கருதல் வேண்டும். அங்ஙனம் கருது வதே நூனெறி.

இவையெல்லாம் உலகியல்; செயற்கையன்று. இயற் கையினையே நூலாசிரியர்கள் சித்திரித்துக் காட்டுகின்றார் கள். இருபாலாரும் கூடுங்காலத்துப் பிறக்கும் இன்பத் தினைப் போலவே இன்னோர் இன்பம் உண்டு. அது இதனி னும் பெரிது. அழிவில்லது. அதுவே பேரின்பம். இவ் வின்பவாயிலாய் அதனைப்பெற எவரும் முயலல் வேண்டும். சிற்றின்பச் சுவையினையே நுகர்வார் அழிவில்லா அப் பேரின்பத்தினையும் பெற முயலலாமன்றோ? முன்னது அழிதன் மாலைத்து. இன்பமேபோலத் துன்பந்தருவது. பின்னது அழிவற்றது. இன்பமாலைத்து. முன்னது இம் மைத்து. பின்னது மறுமைத்து.

தமிழ் மொழிக்கண் இவ்வகவொழுக்கத்தினை மிகுத் துக் கூற ஏதேனும் ஒரு நூல் போதுமே பல நூல்கள் எற்றுக்கு? எனிற் கூறுவேன். இறைவனை வழிபடத் துறை கள் எண்ணில. அவற்றுள் 'நாயகநாயகிபாவம்' அல்லது தலைவன் தலைவிக் கிடையே நிகழும் மன ஒருமைப்பாடு என்பதும் ஒன்று. தலைவி தலைவனையே அடையவும்

அவனருளைப் பெறவும், எங்ஙனம் முயல்கின்றனளோ, அது போலத் தொண்டரெலாம் தம்மைத் தலைவியராக எண்ணித், தலைவனாகிய இறைவனை அடைதல் வேண்டும் என்பது. இதுபற்றிப்போலும் பிற்காலத் தெழுந்த அந்தாதி முதலிய பிரபந்தங்களுக்கிடையே அகப்பொருட் டுறைகள் மலிவனவாயின. அறிந்ததைக்கொண்டு அறியாத தொன்றினை அறிய அவாவுவது எத்துணைச் சிறந்த கருத்தெனு உன்னிப்பார்மின்!

## 2. ஏறு தழுவல்

மணம் எட்டனுள் ஏறுதழுவல் ஆசுரத்தின்பாற் படும். ஆசுரமாவது, கொல்லேறு கொண்டான் இவளை எய்தும்; மாலை சூட்டப்பட்டான் இவளை யெய்தும்; வில்லேற்றினன் இவளை யெய்தும்; இன்னதொரு பொருள் தந்தான் இவளை யெய்தும் என இவ்வாறு சொல்லிக் கொடுப்பது. முல்லைக்கலியில் முதல் ஆறு கலிப்பாக்கள் ஏறுகோடற் செய்திகளைப் பற்றியே கூறும்.

ஆயர், கோட்டினத்தாயர் கோவினத்தாயர் புல்லினத் தாயர் என மூவகையர். அவர் வதியும் இடம் குறும்பென்றும் சிறுகுடி யென்றும் கூறப்படும். மூவகை ஆயருள் எவன் அஞ்சாது ஏறுதழுவி யடக்குகின்றனனோ அவனையே ஆய்த்தியர் நயப்பர்; உவந்து கூடுவர்; ஏனையோரை ஆய்த்தியர் உள்ளத்தாலும் உள்ளார். காதற்குறிப்புத் தோன்றப் பாரார். ஏறுதழுவலுறுகின்ற இடம் ஒரு பரந்த வெளியாயிருக்கும். ஆண்டு ஆயர், பிடவம், செங்காந்தள், காயா முதலிய மலர்களாற் கட்டிய கண்ணியினைத் தலையிலே சூடித் தொகுவர். மகட்கொடைநேரும் ஆயரும் ஆண்டுக் கூடுவர்.

பிடவம், முல்லை, தோன்றி, கொன்றை முதலிய மலர்களைத் தலையிலே சூடி, தழை, கோதை, இழை இவற்றினை

யணிந்து, நீலவாடையுடுத்து, முல்லைமுகையையும் பீலி முருந்தையும்போன்ற பல்லினராய், பெருமழைக் கண்ணராய், மடஞ்சேர்ந்த சொல்லினராய், கனங்குழைக் காதினராய் வந்த ஆய்த்தியர் பரணின்மிசை யிருப்பார்.

ஆண்டு வந்த ஏறுகள் கணிச்சிபோற் சீவிய கூரிய கொம்பினையுடையன. நெற்றியிற் சுட்டிகொண்ட காரெருதும், செம்புள்ளிகள் நிறைந்த வெள்ளேறும், வெள்ளிய காலும் கரிய உடலுமுள்ள ஏறும், சிவந்த வுடலும் வெண்புள்ளியும்கொண்ட எருதும், இளம்பிறைக்கொம்பும்சிவந்த வுடலுமுள்ள கொல்லேறும், வாலியோன் மேனி மானும் வெள்ளேறும், திருமறு மார்பனைப் போன்ற காரேறும், முக்கணான் நிறம்போன்ற கபிலையும், சேய் நிறம் மானும் செவ்வேறும், சங்குபோன்ற சுட்டிகொண்ட காரேறும், மாலையணிந்த வாலியோனைப் போன்று சிவந்த மறுவினையுடைய வெள்ளேறும், இந்திரன் கண்கள் போன்று பல புள்ளிகளைக் கொண்ட கொல்லேறும், வெள்ளுடை யுடுத்த முருகன் போன்று வெள்ளிய காலும் செவ்விய வுடலுமுடைய ஏறும், இன்னும் பலவகைத்தாகிய ஏறுகளும், அங்கே ஊழித்தீ, கணிச்சி, இவைதமைப்போலச் சுழன்று திரிதர,

எழுந்தது துகள்
ஏற்றனர் மார்பு
கவிழ்ந்தன மருப்புக்
கலங்கினர் பலர்.

பின்னர், ஏறஞ்சாப் பொதுவர் ஏறுகளின் மீது பாய்கின்றார். ஒன்று ஒருவனைக் கோட்டாற் குத்திக் குடரைச் சரிக்கின்றது. இன்னொன்று குத்திக் குடர்சரித்துக் கோட்டிற்கொண்டு குலைக்கின்றது. சில ஏறுகள் பொதுவரைத் தெரிந்து தெரிந்து குத்துகின்றன. கொம்பெலாங் குருதிப்

பூச்சு. கொம்புகளைச் சுற்றிலுங் குடர்கள் சுற்றிக்கொள் கின்றன. ஒரு பொதுவன் ஓர் ஏற்றின்மீது பாய்ந்து மார் பிறுகப் புல்லிக்கொம்பினைப் பிடித்துக் கழுத்திற் கிடக்கின் றான். இன்னொருவன் ஏற்றினைத் தழுவச் செல்லுகின்றான். ஏறு இடங்கொடாது கடுக்காய் கொடுக்கின்றது. பாயும் பொதுவர்தம் உடல்களை, ஏறுகள், உழலை மரத்தைப்போலத் துளைக்கின்றன. குருதி குபுகுபு எனப் பெருகி வழிவதால் அவர் கையெலாங் குருதி. அதனுற் கையில் வழுவழுப்புமிக மணலை அள்ளிக் கையைப் பிசைந்து உடம்பிலுந் தூவிக் கணமுந் தாழாராய்க் கடன்மீது பரதவர் சிறு மிதவையை ஏறினாற்போல இலேசாக ஏறுகளைத் தழுவுகின்றனர். என்னே யவர்தம் வீரம்!

ஏறு தழுவல் காணும் மகளிர் ஏழைப் பொதுவனை மறு பிறப்பிலேனுந் தழுவார். உயிரை ஒரு பொருட்டாக எண் ணுது ஏற்றின்மீது ஒய்யெனப் பாய்ந்து தழுவுகின்றார்க்கே ஆய்த்தியர் தோள், புல்லுதற் கெளியவாகும்.

'விலை வேண்டா ரெம்மினத் தாயர் மகளிர்
கொலை யேற்றுக் கோட்டிடைத் தாம்வீழ்வார் மார்பின்
முலையிடைப் போலப் புகின்.'

என்னும் அடிகள் ஆய்த்தியர் முலைவிலை வேண்டார் என் பதனை வலியுறுத்தும்.

அதோ ஏற்றின்மீது கிடக்கின்ற அப்பொதுவன் இவள் தன் தோளின்மீது கிடப்பான். அக் கபிலையைத் தழுவுகின் றான் இக்காரிகையைத் திண்ணமாய்க் கூடுவான். அச் செவ் வேற்றினைத் தழுவலுறுகின்றான் இத் தலைவியின் வேய்த் தோளில் துயிலப்பெறுவான். என்றின்னவாறு பேச்சுக்கள் ஆங்கு மகளிர் கூட்டத்து நிகழும்.

ஏறு பாய்ந்து அதனாலுண்டான புண்களை மார்பு கொண்டேற்றி அதன் வெம்மையாலே ஆற்றுவேன் என்பாளொருத்தி. குருதிப் புள்ளிகள் தோய்ந்த உடம்பினால் தயிர்ப் புள்ளிகள் செறிந்த என்னுடலைத் தலைவன் தழுவு மேல் அது என் தோளிற்கு அழகு செய்யுமென்பாள் மற்றொருத்தி. ஆயரெல்லாம் கொல்லேற்றுத் தலை கண்டஞ்சுதலும், ஆய்ச்சியர் ஏறு தழுவாதபொதுவர் தோள் விரும்புதலும் இடையர் குடிக்கண்ணே ஒன்றாக நிகழ்தல் இல்லையென்பாள் பிறிதொருத்தி.

மேற்கூறிய நிகழ்ச்சிகளையெல்லாம் தோழி தலைவிக்குக் கூறிக் காட்டுவதுமுண்டு. தலைவன் கிடைப்பானோவெனத் தலைவிக்கு ஐயந்தோன்றின், தோழி குழலொலி கேட்டு அதனை நன்னிமித்தமாக்கொண்டு தலைவியைத் தேற்றுவாள். தலைவியரெல்லாம் தத்தம் தலைவர் தம்மைக்கூட முல்லைப் பொழிலுக்குச் செல்வர்.

சென்று தாதெரு மன்றத்திலே குரவையாடித் தெய்வம்பரவுவார். மன்னன் வாழ்க,தென்னன் வாழ்கவெனவும் போற்றுவர்.

## 3. பேச்சுத் திறம்

107. தலைவி தோழிக்கு அறத்தொடு நிற்றலும், தோழி வரைவுடன் பட்டமையைக் கூறுதலும்.

தலைவி:—ஏடி, சுற்றத்தார் ஏறுதழுவலே சிறந்ததென்று ஏறுகளைப் புகவிட்டார். ஏறுதழுவின ஒருவன் தலையிற் கிடந்த கண்ணியை அவ்வேறு கோட்டிற் கொண்டு துள்ளிக் குதித்தது. குதிக்கவே, கண்ணி என் தலை மயிரினுள்ளே வீழ்ந்தது. இழந்த பொருளை மீண்டும் பெற்றாற்போல் யான் அக் கண்ணியை எடுத்துத் தலையிலே முடித்துக்கொண்டேன். இதனை யாய் அறிந்திருப்பாளோ?

தோழி:—அக் கண்ணி அவன் கண்ணி. அவன் வரைந்து கோடல் தாழாதவனன்றே! யாய் கேட்டால் அதனுக்கு யான் செயத்தக்க தீர்வு யாது? ஒன்றும் வேண்டா. வாளா கிட.

தலைவி:—தோழி, பூ முடித்தால் மயிர் நாறும் என்பதை யான் அறியாதேன். அயலான் கண்ணியை மயலால் முடித்தாள் எனத் தாய் கேட்கில் என்னை வெகுளாமல் யாது தான் செய்வாள்?

தோழி:—இனி யெல்லாத் தவறுகளும் நீங்கிப் போயின.

தலைவி:—ஓஒ, அத் தவறுகள் எங்ஙனம் நீங்கின?

தோழி:—ஆயர் மகனாயின், ஆயமகள் நீயாயின், நின் வெய்யன் அவன் ஆபின், அவன் வெய்யை நீயாயின் நின்னை நோதக்கது எதுவுமில்லை.

தலைவி:—அன்னை கருத்து இதுவென நின் நெஞ்சு அறியுமாயின் அவள் என்னை நோகாள்.

தோழி:—இன்னும் உனக்கு விளங்கவில்லையா? ஆயர் மகனையும் நீ காதலிக்கின்றாய்; தாயையும் அஞ்சுகின்றாய். அப்படியாயின், நீ கொண்ட காம நோய்க்கு மருந்தில்லைகாண்.

தலைவி:—மருந்தில்லையேல் வருந்தியே விடுவேன்.

தோழி:—வருந்ாதி, தலைவன் கண்ணிச் செய்தியைத் தாய் அறிந்து, தந்தையோடும் தமையன்மாரோடும் கலந்தாய்ந்து, திருமால் இவட்கொரு கணவனைத் தந்தான் என மகிழ்ந்து, களவொழுக்கம் பிறரறியாமற் காக்கும் பொருட்டு உன்னைக் கொடுக்கத் துணிந்தாள்.

110. வினைவல பாங்கிற் றலைவி வெண்ணெய் நொடைக்குச் சென்றாள். வினைவல பாங்கிற் றலைவன் அவளை எதிர்ப்பட்டு மெய் தீண்டித் தனது ஆற்றாமையைத்

தெரிவிக்கின்றான். கேட்ட தலைவி, ஈண்டுப் பிறர் அறிவர், நாளைக்கன்றோடு புலத்துச் சேறும் என்கின்றாள்.

தலைவி.—ஏடா, குறும்பிடத்தாயர் குடிதோறும் மகளிரை நீ விரும்புகின்றாய். நினது காம வேட்கை தேட்கடுப்புத் தீர மருந்திட்டுப் போக்குவதொன்றோ? நின்னொடு நகைத்தற்கும், மெய் தீண்டுதற்கும் மெய்யைத் தந்தேன். நீயோ என்னைப் புணர்ச்சிக்கும் எளியளெனக் கொண்டாய். மோர் கேட்டார்க்கு மோரீந்து எளியளானால் வெண்ணெய் வேண்டினும் அது கொடுத்து எளியளாவள் எனக் கருதலாமா?

தலைவன்:—ஒண்ணுதால், கூட்டத்தை மறுக்கின்றாய்; அது வேண்டா. யானிதோ நீங்குவேன். ஆய் மகள், மத்தைச் சுற்றிய கயிறுபோல நின்னலத்தையே சூழ்ந்து சுழன்று திரிகின்றதென் நெஞ்சம். நீ என்னிடத்துக் கூறிய சொற்கள் அச்சத்தை விளைக்கும். என் நெஞ்சு உன்னிடத்திலிருந்து மீளும்; நிலை பெறாது நிற்கும். மீட்டும் புறப்பட்டுத் தடுமாறும். தலையீற்றுப் பசு பொழுது விடிந்த பின்னரும் மேய் புலஞ் செல்லாது தொழுவிற் கட்டிய தன் கன்றினையே நினைந்து நினைந்து சூழும். அது போலவே யானும். இது என் நெஞ்சின் நிலை. என்னிடத்து எந்நாளும் வருத்தம் மிக்கது. என்னுயிர், பாலில் மருந்திட்டு வெண்ணெயைக் கடைந்தெடுத்த பால் நுகர்வார்க்குப் பயன் சிறிதும் தராதவாறு போலக் கைசென்று தேய்ந்து விடுகின்ற அளவாகி விட்டது. செய்வதின்னதென்று அறிகிலேன்.

தலைவி:—ஓஒ, நீ அத்தன்மை யுடையாயோ! ஆயின் செய்தி கேள். இது பலருந் திரிகின்ற மன்றம். எதிர்ப்பட்ட அப்பொழுதே மனவமைதி குலைந்து, மனவமைதி

மிக்குடையார் மகளிரைப் புணரேனேல் உயிர் வாழேனென் றாய். இனி நீ இங்ஙன் நிற்றலுந் தீது. சுற்றத்தார் காண்பர். இன்றுபோல நாளைக்கும் புலத்திலே கன்று மேய்த்தற்குப் போவேன். ஆண்டுவந்து இவையெல்லாஞ் சொல். இனி இங்கு நில்லாதே செல். இடம் அது.

111. தலைவி ஆயத்திடைத் தலைவனைக் கண்டுபேசிய வற்றைத் தோழிக்குக் கூறி, அவளைத் தலைவனை வரைவு கடாவுமாறு சொல்லி, யாய்க்கும் அறத்தொடு நிற்றல் வேண் டும் என்றது.

## தலைவி தோழிக்குக் கூறியவை

தோழி, யான் கறந்த பாற்கலங்களை எடுத்து வைத் தேன். கன்றுகளையெல்லாம் தாம்பிற் பிணித்து மனைக் கண் நிறுத்தினேன். பூத்தொழில் மிக்க நல்ல கரைகளை யுடைய அன்னை தந்த நீலவாடை பக்கத்துத் தாழ, மெய்யை அசைத்துப் பாங்கர்க் கொடியும், முல்லைக் கொடியும் படர்ந்த தோட்டத்தில் மூவினத் தாய்த்தியர் மகளிரோடும் கூடிவிளையாடி நின்றேன். அங்குக் குருந்தங் கண்ணிப் பொதுவன் என்னை நோக்கி, 'நல்லாய், நீ இழைத்து விளையாடுஞ் சிற்றிலையானுஞ் சிறிது புனைவேன்' என்றான்.

"ஏடா, என்னை வரைந்துகொண்டு எனக்கென ஓரில் லம் அமைக்க அறியாய், யானோ சுற்றத்தார் வீட்டில் இருக்கின்றேன். நீ என்னைப் பெற்றுவிட்டதுபோல நினைக்கின்றாய். ஆதலின் உலகியலில் ஒரு சிறிதாயினும் கற்றாயல்லை." என்றேன்.

தலைவன் "முற்றிழாய், அது கிடக்க. கட்டின மாலையை நின் கூந்தலிற் புனையட்டுமா?" என்றான்.

நான், "என் சுற்றத்தார் கட்டிக் கொணர்ந்து சூட்டின மாலையையே மாலையென்று நீ இருக்கின்றாய். என்னை வரைந்துகொண்டு பல தாரமும் மாலைசூட்டி மகிழ்தலை அறியாய். ஆதலின் நீ பெரிதும் பேதை" என்றேன்.

அவன், "மாதராய், சுணங்கு பரந்த நின் மார்பில் தொய்யில் எழுதுவேன்" என்றான்.

நான், "நீ வரைந்துகொண்டு வெளிப்படையாய்த் தொய்யில் எழுதாய். யானோ சுற்றத்தார் எழுதுங் காலத்திற்கு உடன்பட்டு நிற்கின்றேன். இனி யிங்ஙன் என்னால் இருத்தல் முடியாது. நீ பெரிதும் மயக்கத்தையுடையவனாய்க் காண்கிறாய். ஆனால், அன்புள்ளார் போலப் பேசுகின்றாய். அங்ஙனம் கூறுதல் இனி ஒழிக" என்றேன்.

பின்னர்த் தலைவி தோழியை நோக்கித் "தோழி, அவன் கூறிய அனைத்தையும் யான் இங்ஙனம் வெட்டிப் பேசவே, இனி இங்குக் களவு நிகழாதென்று அலமந்து மீண்டான். நீ அவனுக்கு ஆய மகளிரை மணந்து கொள்ளும் இலக்கணத்தை அறிவி. அறிவித்து எந்தைக்கும் யாய்க்கும் இக்களவொழுக்கந் தெரிய அறத்தொடு நில். அவனும் நோய் கொண்டான். யானும் அன்னள். அதனைப் போக்கு. இதனை மனத்துக்கொள்" என்றாள்.

## 4. உவமை முதலியன

### உவமைகள்

1. களிபட்டானிலையேபோல் தடவுபு
2. மணிபுரையுருவின காயா
3. முழக்கென இடியென
4. சுடர் விரிந்தன்ன சுடர் நெற்றி
5. முல்லை முகையும் முருந்தும் நிரைத்தன்ன பல்லர்

6. பெருமழைக் கண்ணர்
7. மணிவரை மருங்கின் அருவிபோல
8. மீன்பூத்தவிர் வரும் அந்திவான் விசும்பு
9. படுமழையாடும் வரையகம் போலும்
10. காற்றுப்போல் வந்த கதழ்விடைக்காரி
11. திங்கள் மறுப்போற் பொருந்தியவன்
12. பானிற வண்ணன்போற் பழிதீர்ந்த வெள்ளை
13. திருமறுமார்பன்போல் திறல் சான்ற காரி
14. முக்கண்ணன் உருவேபோல் முரண்மிகு குரால்
15. வேல் வல்லான் நிறனேபோல் வெருவந்த சேய்
16. உருவப்பல் கொண்மூக் குழீ இயவை போல
17. வெரூஉப்பிணை மானோக்கி நல்லாள்
18. வேயுறழ்மென்றோள்
19. நாள்மீன்வாய் சூழ்ந்தமதிபோல்
20. பான்மதி சேர்ந்த அரவினைக் கோள் விடுக்கும் நீனிற வண்ணன்
21. ..........நூற்றுவர் மடங்க
வரிபுனை வல்வில் ஐவர் அட்ட
பொருகளம்போலும்
22. வள்ளுருள் நேமியான் வாய் வைத்த வளைபோல
23. அவிழ்பத நோக்கி நறவின் முகை சூழுந் தும்பி
24. மத்தம் பிணித்த கயிறு
இவைபோல் இன்னும் பலவுள

கருத்துக்களும் பழக்க வழக்கங்களும்

1. ஆயர் கண்ணி சூடல்
2. கணிச்சிபோற் கோடுசீவல்
3. ஆயர் கதன் அஞ்சாமை
4. ஆயர் குழலூதல்
5. சுவல்மிசைக் கோலசைத்த கையன் ஆயன்

6. ஆய்த்தியர் தழை கோதை இழை இவற்றை அணிவர்
7. பொதுவன் அந்துவராடையன்
8. மணத்திற்குத் தண்ணுமையில் தாளந்தளரா தெழுப்புதல்
9. ஆய்த்தியர் மடஞ்சேர்ந்த சொல்லர்
10. கோட்டினத்தாயர் கோவினத்தாயர் புல்லினத் தாயர் என மூவரும் ஏறு தழுவற் குரியார்
11. ஏற்றுக்கோடஞ்சுவானை ஆய்மகள் மறுமையினும் புல்லாள்
12. உயிரஞ்சும் பொதுவன் தோள் ஆய்மகள் தோயாள்
13. எருத்துக்கோட்டிடை வீழ்வார்க்கு முலைவிலை யில்லை
14. ஆய்த்தியர் குரவையாடித் தெய்வம் பராவி மன்னனை வாழ்த்துவர்
15. நல்லினத்தாயர், தென்னவன் தொல்லிசை நட்ட குடியோடு தோன்றியவர்
16. யானை வெகுள மருந்திட்டுப் புகைப்பர்
17. கோடு குறிசெய்த மார்பினை ஆய்த்தியர் பாடுவர்
18. அலரெடுத்த ஊராரை உச்சி மிதிப்பர்
19. ஆயன் நெஞ்சு கோட்டிடைப் புகும். ஆய்த்தியின் நெஞ்சு அவனிற் புகும்
20. ஆயர், உறியையும், கழு, சூட்டுக்கோல் இவற் றினையிட்டுச் சுருக்கிய பையினையும் உடையர்
21. கோவலர் வழூஉச் சொல்லர்
22. ஆயர் புண்ணுக்கு ஆய்த்தியர் முலைவேது கொண்டொற்றுவார்
23. ஆயர் ஏற்றினை யஞ்சுதல், ஆய்ச்சியர் தோள் காமுறுதல் இவ்விரண்டும் ஓராங்குச் சேர்தல் இல

24. அல்குலும் தோளும் கண்ணும் பெருத்து, நுத லும் அடியும் நுசுப்பும் சிறுத்தவர் ஆய்த்தியர்
25, கண் இளமாங்காய் போழ்ந்தன்னது
26. எந்தைக்குப் புகாவுய்த்துக் கொடுத்தல், என்னைக் குக் கலத்தொடு செல்லல், தினைக்காலுள் ஆய் விட்ட கன்று மேய்த்தல் இம்மூன்றும் அடிமைத் தொழில்களாம்
27. அடியைத் தலையாற்றொட்டுச் சூளுரைத்தல்
28. காமனுக்குப் பாலமுது படைத்தல்
29. மாங்காய் நறுங்காடி கூட்டல்
30. இடுதேள் மருந்து
31. பாலில் மருந்திட்டு வெண்ணெய் எடுத்தல்
32. மோர் விற்றல்
33. தோளிற் கரும்பெழுதல்
34. காஞ்சிமரத்தின்கீழ்க் குறி செய்தல்

## சிறப்புடைச் செய்யுளடிகள்

1. விரிநீர் உடுக்கை உலகம் பெறினும்
அருநெறி ஆயர் மகளிர்க்கு
இருமணம் கூடுதல் இல்லியல் பன்றே

2. காணுமையுண்ட கடுங்கள்ளை மெய்கூர
நாணுது சென்று நடுங்க உரைத்தாங்கு

3. நெருப்புக்கைதொட்டவர் போல விதிர்த்திட்டு

4. யாய்வருக ஒன்றோ பிறர்வருக மற்றுன்
கோவரினும் இங்கே வருக தளரேன்யான்
நீயருளி நல்கப் பெறின்

5. மாணவுருக்கிய நன்பொன் மணியுறீஇப்
பேணித் துடைத்தன்ன மேனியாய்

### அரிய சொல்லாட்சிகள்

தளி, ஞெலிபு, வருபுவருபு, உலண்டு, சாறு, இழை, பெடை, புகல், மிடை, புரிபுபுரிபு, தெரிபுதெரிபு, கண்டை, கூந்தற் குதிரை, அருக்குதல், தொழீஇஇ, செகில், காணிகா, மண்டை, உழலைமரம், குறும்பு, ஞாய், தெரு, கட்குத்திக் கள்வன், பதவப்புல், மதைஇனள், புண்ணில்லார், கடுஞ்சூலாநாகு, மன்ற, அல்லாத்தல், நடாக்கரும்பு, ஓரிப்புதல்வன், வியங்கொளக்கூறல், பூவலூட்டல், மாதர், புட்டில், ஈதோளி.

## 5. முடிவுரை

இது கலித்தொகை-தமிழ் அல்லது இன்பத்தொகை. இன்பத்தினைத் தாம் முதற்கண் நுகர்ந்து செய்யுளுஞ் செய்து தொகுத்துக் கொடுத்தார் நல்லந்துவனார். இன்பமே விரும்பும் தமிழ் மக்கள் இக்கலித்தொகையை நுகர்தலே அவர்தம் முதற் கடமையாகும். கடமைகளை மாநாடு கூட்டிப் பேசியும் மக்கள் அவ்வின்பத்தைத் துய்க்க முன்வரத் தாழ்ப்பரேல் என்ன பயன் விளைந்துவிடப் போகின்றது? தமிழர்க்குத் தமிழ்மொழியே தாய்மொழி என்னும் உணர்ச்சியற்றுப்போன காலமிதுவேயென யான்கூறின் சிலர்க்கு அது துன்பத்தைத் தரும். வசனமுஞ் செய்யுளும் தோன்றுது நின்றிட்டால் மொழி வளர்ச்சியேது? இவற்றுக்கெல்லாம் யாமே காரணராவோம். படித்த மக்களிடையே தமிழ்மொழி இழிந்தது, பயனற்றது, என்னும் உணர்ச்சி இருந்து வருகின்றது. இக்கருத்தினைக் கல்லூரிகளிலும் ஏனையிடங்களிலும் காணலாம். தமிழ்மொழியினை மாணவர் பயிலாது செய்யும் வழிகளைச் சிலர் கண்ணும் கருத்துமாய்ச் சூழ்ந்து வருகின்றனர். சிலர் நெஞ்சில் இக்கருத்து இருந்தாலும் வெளிக்காட்டினுல் பிறர் நகைப்பரே என்பதற்காக அஞ்சிக் கிடக்கின்றுர். ஆராய்ச்சிகள் பெரு

கிப் பல தமிழ்ப் பரீட்சைகளும் நடந்துவருமிக் காலத்தில் தமிழ் வளர்ச்சி இல்லையென்று எப்படிக் கூறலாகும் எனச் சிலர் கேட்கலாம். அக்கேள்விக்கு விடையினை விரைவிற் கூற இயலவில்லை.

புலமை முற்றியவர்களிற் சிலர் தமக்குப் புலமை முற்றிய காரணத்தானே ஏனையோரை ஒன்றுக்கும் பற்றாதவர்கள் எனப் பேசித் திரிகின்றார்கள். எல்லார்க்கும் இளப் பருவம் உண்டென்பதை அவர் அறியார்போலும்! பேசுவது தமிழ்த்தொண்டும் ஈட்டுவது வெள்ளியாகவும் இருந்தாற் பயனில்லை. என்னே யிவர்க்கிருக்கும் பரந்த நோக்கம்! இந்நோக்கத்தால் தமிழ் வளருமே!

இன்னொரு பெரிய தடையும் தமிழ் வளர்ச்சிக்குண்டு. சாதியும் மதமும் அரசியல் வாதத்தோடு அடங்கல் வேண்டும். மொழி வளர்ச்சிக்கண் அது வருமாயின், மொழி வளர்ச்சி முட்டுறுவது திண்ணம். பழந் தமிழ்மக்கள் அவ்வேறுபாடுடையராகக் காணப்படவில்லையே. எச்சாதியினரும் எம்மதத்தினரும் கலந்து கலந்து தமிழ்த் தொண்டாற்றவில்லையா? புற மதத்தினரால் எழுதப்பட்ட நூல்களேனும் அந்நூல்களின் அருமை பெருமை கருதி நாம் இன்றும் போற்றிப் படித்து வருகின்றோமே.

நல்ல நூல்கள் வெளியிட்டால் விலைகொடுத்து வாங்குவார் மிகச்சிலர். அதனாலேதான் கம்பராமாயணத்திற்குச் சுத்தமான மூலப்பிரதி இன்னும் கிடைக்கவில்லை. தமிழ் நூல்களுக்கு விலைகொடுத்து வாங்கும் பேறுபெற்றவர் பலர். படித்தறியும் பேறுபெற்றவர் சிலர். வாங்கும் பேறுடையார் ஐம்பது நூறாகப் பிரதிகளை விலைகொடுத்து வாங்கிப் படிக்கும் பேறுடையார்க்கு வழங்கினால் தமிழ் மொழி வளராதோ? புத்தகப் பதிப்பாளர் ஊக்கங்கொள்ளாரோ? பதிப்பாளர்காள்! தமிழ்ப் புலவராகிய எம்மை

நம்பி இனியொன்றுஞ் செய்யாதீர்கள். உங்களை வேண்டிக் கொள்கின்றோம்.

சென்னை போன்ற நகரங்களில் நாமிருந்து இங்ஙனம் கூடிக் கதறுகின்றோம். கிராமங்களிலே இலட்சக்கணக்கினரான நந்தமிழ் மக்கள் தமிழ் நூல்களைப்பற்றி ஏதேனும் அறிவார்களா? அவரெல்லாம் எழுதப்படிக்கக் கற்றுக் கொள்ளாத வரையில் தமிழ்ப் பற்றில்லாப்போலிமக்கட்கு நல்லகாலம். என்று அவரெல்லாம் எழுதப் படிக்கக் கற்றுக்கொள்வார்களோ அன்றைக்குத் தமிழ் மேகம் குமுறும், மின்னும், பொழியும். அன்றுதான் இலக்கியவுலகத்தில் ஒரு பெரிய புரட்சி எற்படும். அன்றுதான் கிராமம் நகரமென்னும் இரு தொகுதியும் ஒன்றாகும். அன்றுதான் தமிழ் அறியாத காரணத்தால் அதில் ஒன்றுமில்லை என வெறுத்ததனோடமையாது மாணவர் நெஞ்சினும் பதியவைத்த தம் நயம்பேணும் நம்மவர் தத்தம் நிலையினை உணர்ந்து தெளிவார்கள். கிராமச் சோதரர் அவர் தமை மதியார். ஒருகால் அவர்கள் தமிழில் பேசினால் ஒரு தீங்கினையும் அடையார்கள்.

தமிழ் மொழியில் பிறமொழிச் சொற்களும் கருத்துக்களும் கலந்துவிட்டன என்று புழுங்கும் நாமெல்லாம், தமிழ் நாட்டில் ஆங்கிலம் கலவாமல் தமிழ் பேசமுடியாத தமிழனைக் காணும்போது என்ன செய்துவிடப்போகிறோம்? ஒவ்வொரு தமிழனும் சிறந்த இலக்கியமொன்று, இலக்கணமொன்று, நீதி நூலொன்று—இவைதமைக் கற்றேதீர வேண்டும். இளைஞராக, குறுமகளிராக இந் நூல்களைக் கல்லாரேல் அவர்க்குத் திருமணமில்லை. கற்றுத்தான் திருமணமும் கூட்டமும் என்று விதித்தாலன்றி இக்குறைக்கு வேறு தீர்வில்லை. தமிழில் கடிதம் எழுதுவார் அருகிப் போயினரே! தமிழர் தமிழ

ரோடு ஆங்கில மொழியில் அசுவதாட்டியாய் விரைந்து பேசுகிறார்களே! அன்பர்களே, ஆங்கிலம் இழிந்ததென்று யான் கூறவரவில்லை. இன்றியமையா விடங்களிற் பேசுக: வருங்கேடொன்றுமில்லை. தமிழர் தமிழரோடு ஆங்கில மொழியால் ஏன் பேசவேண்டுமென்றுதான் நான் கேட்கிறேன். அங்ஙனம் பேசுவது தமிழ் இழிந்தது என்னுங் கொள்கையாற்றானே? ஒருகால் தமிழில் பேசும் ஆற்றல் இல்லையென்றால், ஆங்கில மொழியில் எங்ஙனம் அவ்வாற்றல் பெற்றார்? கற்ற காரணத்தால் என்னின், நன்று கூறினீர்: வழி வழியாகத் தொடர்பேதுமிலா ஒரு மொழியிற் சில ஆண்டுகளிற் புலமை பெற்றவர் தாய் மொழியில் ஓராண்டினில் முற்றிய புலமையை அடையாரோ?

பேசிப் பயனில்லை. உணர்ச்சி வேண்டும். அஃதுண்டேல் வளர்ச்சி நம் கையில். தமிழ்ப் புலவர் தமைப் போற்ற வேண்டும். புகாவுக்கே புகார் செய்பவர் மொழியின்கண்ணும் புகார். நாம் இங்கே கரைகின்றோம். ஏதோ தமிழ்க் கூட்டம் என ஏனையோரிருக்கின்றார். இருக்கட்டும் கிராமமும் நகரமும் இரண்டறக் கலக்கும்போது உண்மை வெளியாகும். அவை கலவாத வரையில் மொழி வளர்ச்சி முயற்கோடேயாம்.

அன்பர்களே, தமிழ் நூற் கடலில் புலவரெனும் கொண்டற் குழாங்கள் சென்று சென்று, பருகிப் பருகிக், கமஞ்சூல் கொண்டு, மின்னிக் குமுறித் தலைப்பெயலாஞ் சொன்மாரி பொழிக. அம்மழை யாறுகளாவுங் கால்களாகவும் இடையறாது பெருகிச் சென்று தமிழ் நாடெங்கணும் வளைந்து வளைந்து நூல் கல்லாத் தமிழர் நெஞ்செனும் விளை புலத்துப் பாய்க. பாய்ந்தால் ஒன்று நூறாக விளையுள் காண்போம். காணும் அந்நாளே தமிழினை—இன்பத் தொகையினைத் துய்க்கும் நன்னாளாகும். இறைவன் அருள் புரிக.

---

## ௩. குறிஞ்சிக் கலி

(வித்துவான் மா. இராசமாணிக்கம் பிள்ளை, B.O.L., M.O.L.)

I

குறிஞ்சிக் கலியை ஆராயப் புகுமுன் அதனை ஒரு பகுதியாகக் கொண்டுள்ள கலித்தொகையைப்பற்றி ஓரளவு அறிதல் இன்றியமையாததாகும். இந்நூலை முதலில் வெளியிட்ட திரு. சி. வை. தாமோதரம் பிள்ளை அவர்கள், 'இந்நூல் இயற்றியோர் ஒருவரே' எனக் கருதினர். அதன் பின்,

"பெருங்கடுங்கோன் பாலை[1], கபிலன் குறிஞ்சி[2]
மருதனிள நாகன் மருதம்[3],—அருஞ்சோழன்
நல்லுத் திரன்முல்லை,[4] நல்லந் துவனெய்தல்[5]
கல்விவலார் கண்ட கலி.

என்னும் வெண்பா வெளிப்பட்டது. அதுமுதல் ஐந்து கலியும் புலவர் ஐவரால் பாடப்பட்டவை எனத் தமிழறிஞர் கருதலாயினர். சென்னைப் பல்கலைக் கழகத் தமிழாராய்ச்சித் துறைப் புலவராக இருந்த திரு. K. N. சிவராஜப்பிள்ளை B.A. அவர்கள் 'கலித்தொகை ஆசிரியர் ஒருவரே' என முடிபு கட்டினர். இந்நிலைமையில், கலித்தொகை ஆசிரியர் ஒருவரா? ஐவரா? பலரா? என்பதைத் துணிதல் நமது கடமை அன்றோ?

### ஐவர் அல்லர்

காரணங்கள் :

(1) கலித்தொகை ஆசிரியர் ஐவரே என்பதற்கு மேற்காட்டிய வெண்பாவைத் தவிர வேறு ஆதாரம் இல்லை. எனவே, அவ்வெண்பா நம்பத் தக்கதா? என்பதை முதற்கண் ஆராய்தல் வேண்டும்.

[1]பாலைக் கலியைப் பாடியவன்—பெருங்கடுங்கோன்
[2]குறிஞ்சிக் கலியைப் பாடியவர்—கபிலர்
[3]மருதக் ,, ,, —மருதன் இளநாகனர்
[4]முல்லைக் ,, ,, —சோழன் நல்லுருத்திரன்
[5]நெய்தற் ,, ,, —நல்லந்துவனர்

என்பது அவ்வெண்பாவில் உள்ள செய்தி. ஏனைய தொகை நூல்களில் பாலைத்திணைபற்றிப் பல செய்யுட்களைக் கடுங்கோன் பாடியிருத்தலாலும், குறிஞ்சித்திணை பற்றிப் பல செய்யுட்களைக் கபிலர் பாடியிருத்தலாலும், முதல் இரண்டு கலிகளை இவர்கள் பாடினர்கள் எனக் கொள்ளினும், ஏனைய மூன்றையும் மற்றப் புலவர் மூவரும் பாடத் தகுதி வாய்ந்தவர் என்பதற்குரிய ஆதாரம் ஏனைத் தொகை நூல்களில் காணக்கூடவில்லை. மருதன் இளநாகனர் பிற நூல்களில் பாடியனவாகக் காணப்படும் 39 செய்யுட்களில் பாலைபற்றி 17-ம், குறிஞ்சி பற்றி 9-ம், முல்லை பற்றி 5-ம், நெய்தல் பற்றி 5-ம், மருதம் பற்றி மூன்றுமே உள்ளன. இவர் மருதக் கலியைப் பாடினர் என்பது பொருந்துவதாக உள்ளதா? சோழன் நல்லுருத்திரன் புறநானூற்றில் ஒரு செய்யுளே (190) பாடியதாகத் தெரிகிறது. அவன் பாடிய பா ஒன்றும் வேறு தொகைநூல்களில் இல்லை அவன் முல்லைக்கலியைப் பாடினன் என அவ்வெண்பா கூறுகிறது. நல்லந்துவனர் நெய்தற்றிணையில் ஒரு செய்யுளும் செய்திலர். அவர் நெய்தற்கலியைப் பாடியதாக வெண்பா விளம்புகிறது. [1]

(2) முல்லைக் கலியில் கூறப்படும் முல்லை நில மக்கள் பாண்டிய நாட்டவராகக் காணப்படுகின்றனர். அவர்கள்

1. K. N. Sivaraja Pillai's 'The Chronology of the Early Tamils' P. 35.

பாண்டியனை வாழ்த்துவதாகச்செய்யுள் கூறுகிறது. சோழ வேந்தன் தனது நாட்டு முல்லைநில மக்களைப் பாடாதது வியப்பே அன்றோ? சோழ அரசன் தனது நாட்டு மக்களைப் பற்றிப் பாடாமல், பாண்டிய நாட்டு முல்லைநில மக்களைப் பற்றி மட்டும் தனது முல்லைக்கலியில் பாடினான் என்னல் சற்றும் பொருந்தாது. முல்லை நிலம் பாண்டியர்க்கே உரிமையுடையதுமன்று. பாண்டியனை வாழ்த்திப் பரவும் ஒரு குறிப்பிட்ட முல்லை நிலத்தாரைப்பற்றிச் சோழவேந்தன் நூல் பாடினான் என்பது அறிவிற்கும் அனுபவத்திற்கும் சற்றும் பொருந்தாததாகும்.

(3) நெய்தற் கலியைப்பற்றி ஒரு சிறு செய்யுளும் ஏனைய தொகை நூல்களுட் பாடியிராத ஒருவர், நெய்தற் கலியைப் பாடினார் என்பது, கருக்கொள்ளாது மகப்பேறு தோன்றினாற்போலாகும் அன்றோ?

(4) 'கலித்தொகை முழுவதும் நன்கு ஆராயின், செய்யுட்கள் ஒரே ஆசிரியர் இயற்றியன என்பது புலனாம். இதனை ஒப்புக்கொள்ள மனமற்றவர் இவ்வெண்பாவினை வெளிக்கிளம்ப விட்டனர். இவ்வெண்பா எந்தக் கலித்தொகை ஏட்டிலும் இல்லை; வேறு நூல் ஏட்டுப் பிரதிகளிலும் இல்லை. மாயமாய் வந்ததாகும். இதனை நன்கு யோசியாது, புலவர்கள், கலித்தொகையை ஐவர் பாடியதாகக் கொண்டுவிட்டனர்.'[1] இது முற்றும் ஆதாரமற்ற—இக்காலப் புலவர் எவரோ கட்டிவிட்ட வெண்பா ஆகும் என்பதே சென்னைப் பல்கலைக்கழகத் தமிழாராய்ச்சித் துறையினராய திரு. S. வையாபுரிப் பிள்ளை B.A., B.L. அவர்கள், திரு. வித்துவான் வே. வேங்கடராஜுலு ரெட்டியார் அவர்கள் கருத்துமாகும்.

1. Ibid, p. 225.

(5) திருநெல்வேலி—சுவர்ணம் பிள்ளை அவர்கள் தமக்குக் கிடைத்ததாகக் கூறிய 'ஊசிமுறி' என்னும் நூலைத் தமிழ்ப் பேராசிரியர் திரு. கா. நமச்சிவாய முதலியார் அவர்கள் பொருள் கொடுத்து வாங்கி ஆராய்ந்தார்கள்; அது போலி நூல்—பொருளுக்காக இக்காலப் புலவன் பாடிய பொய்ந்நூல்-என்பதை அறிந்து கிழித்தெறிந்தார்கள். இங்ஙனம் பொருளுக்காகவும் விளையாட்டாகவும் பலர் தாமே கட்டிய பாக்களைப் 'பழம் பாடல்கள்' எனக் கூறி ஏமாற்றல் உண்டு. அத்தகையோருள் ஒருவர் செயலாக இருக்கலாம் இவ்வெண்பாவின் படைப்பு எனக் கோடலே பொருந்தும்.

(6) கலித்தொகைக்கு உரை வகுத்த நச்சினார்க்கினியர் கி. பி. 14—ஆம் நூற்றாண்டினர் என்பர் ஆராய்ச்சிவல்லார். அவர், நெய்தற்கலி 25-ஆம் செய்யுள் உரையில், "... தம் பேரறிவு தோன்ற ஆசிரியர் நல்லந்துவனார் செய்யுள் செய்தார்" எனக் குறிப்பிட்டுள்ளார். எனவே, அவர் காலத்தில் (கி.பி. 14-ஆம் நூற்றாண்டில்) 'நெய்தற்கலிச் செய்யுள் நல்லந்துவனார் (ஒன்றோ-பலவோ) செய்தார்' என்னும் வழக்கு இருந்ததென்பது தெரிகிறது. கடவுள் வாழ்த்தின் உரையில், "ஆதலால் ஈண்டுப் பாலைத் திணையையும் திணையாக ஆசிரியர் நல்லந்துவனார் கோத்தார் என்று கூறுக" என்று நச்சினார்க்கினியர் கூறுதலை நோக்கக், கலித்தொகையில் உள்ள பிற நான்கு கலிகளைப் பாடியவர் இன்னவர் என்பது கி. பி. 14-ஆம் நூற்றாண்டினரான நச்சினார்க்கினியர்க்கே தெரியவில்லை—அவர் காலத்துப் புலவர்க்கும் தெரியவில்லை—வழக்கிலும் இல்லை—என்பன அறியலாம் அன்றோ? மிகச் சிறந்த உரையாசிரியராய அவருக்கே அவர் காலத்தில் தெரிந்திராத இவ்வெண்பா, இவ்விருபதாம் நூற்றாண்டில் திடீரெனத் தோன்றினமை

பெரு வியப்பன்றோ? நூலறிவோடு நுண்ணறிவுடையீர்! நன்கு ஆய்மின்!

(7) ஒவ்வொரு கலியையும் ஒருவரே பாடினார் எனக் கோடலும் பொருந்துவதாகத் தெரியவில்லை. காட்டாக, 'களவுப் புணர்ச்சி' என்னும் ஒரு பொருள் பற்றி 29 செய்யுட்கள் பாடவேண்டிய அவசியம் என்ன இருக்கிறது? கூறியதே கூறலாம் வள்ளைப் பாடல்களும், கைக்கிளைப் பாடல்களும், வரைவு கடாதல் பற்றிய பாடல்களுமே குறிஞ்சிக் கலியில் மிக்குள்ளன. இவற்றுள் ஒவ்வொன்றிலும் நுட்பமாக அறியத்தகும் சிறப்புப் பொருளும் இல்லை. இந்நிலையில் ஒரே புலவர் இவற்றை வேலைகெட்டுப் பாடியிருப்பர் என நினைத்தற்கில்லை. இங்ஙனமே பிற கலிகளும் உள்ளன. இங்ஙனம் ஒரே துறையில் கூறியது கூறலாகச் (Tedious Repetition) சங்கத்துச் சான்றோர் செய்யுட்கள் இருத்தல் அருமை; இருப்பினும் அவர்க்கு இழுக்காம்.

இன்ன பிற காரணங்களால் கலித்தோகைப் பகுதிகள் ஐந்தும் ஐவரால் பாடப்பட்டவை அல்ல என ஒருவாறு கூறலாம்.

### ஒருவர் அல்லர்

**காரணங்கள்:**

(1) கலித்தொகை எட்டுத்தொகை நூல்களுள் ஒன்று. 'தொகை நூல்' என்பது பல்வேறு காலத்துப் பல்வேறு புலவர் பாடிய செய்யுட்களைக் கொண்ட நூல் ஆகும். இவ்விலக்கணம் கொண்டே ஏனைய தொகை நூல்கள் தொகுக்கப்பட்டுள்ளன. அம்முறையில் அமைந்தவையே கலிச் செய்யுட்கள் என்னும் முடிபாற்றான் அவை 'கலித்தோகை' எனப் பெயரிடப்பட்டன; தொகை நூல்

களுள் கலித்தொகையும் ஒன்றாகக் கருதப்பட்டு வருகிறது. அந்நூற்பாக்கள் ஒரு புலவர் செய்தவை ஆயின் 'தொகை' எனப்படா. தொகுக்கப்பட்டவை அல்லவோ 'தொகை' எனப் பெயர் பெறும்? ஒருவரே பாடினவர் ஆயின், அச் செய்யுட்கள் தொகுக்கப்பட்டவை ஆகா அல்லவோ? எனவே, 'தொகை' என்னும் பெயர் ஒன்றே—கலித் தொகை பாடியோர் ஒருவர் அல்லர் என்பதை மெய்ப்பித் தல் காண்க.

(2) ஒருவரையே ஆசிரியராகக் கொண்ட சிலப்பதி காரம், மணிமேகலை, சிந்தாமணி போன்ற நூல்களின் ஏட்டுப் பிரதிகளில் அவ்வந்நூல் ஆசிரியர் பெயரும் காண் கின்றோம் அல்லவா? அம்முறையில், கலித்தொகை ஒருவரால் செய்யப்பட்டிருப்பின், ஆசிரியர் பெயர் ஏடு களில் இருந்திருத்தல் இயல்பே அன்றோ? அங்ஙனம் இராமை ஒன்றே—கலித்தொகை நூல் ஒருவரால் செய்யப் பட்டதன்று என்பதை மெய்ப்பிக்குமன்றோ?

(3) "(நெய்தற்கலியில் உள்ள) செய்யுளை ஆசிரியர் நல்லந்துவனார் செய்தார்; முறைப்படியே கோத்தார்.;' என வரும் நச்சினார்க்கினியர் கூற்று கவனித்தற்குரியது' நெய்தற்கலியில்மட்டும் நல்லந்துவனார் பெயர் குறிப்பிட்ட உரையாசிரியர் ஏனைக் கலிகளில் கூறாமையும், 'கோத்தார்.' எனக் கூறலும் கலித்தொகைச் செய்யுட்கள் ஒருவர் செய் தன அல்ல-நல்லந்துவனாரே பாடியவை அல்ல-என்பவற்றை நன்கு விளக்குவனவாகும். அனைத்தும் பாடியவர் நல்லந் துவனாரே எனின், 'கோத்தார்' எனல் பொருத்தம் அன்றே!

(4) ஒரு கலிக்குள் ஒரே துறையில்-ஒரே பொருள் பற்றிப் பல பாக்கள் ஒருவரே பாடியிருத்தல் இயலாது.

இங்ஙனம் ஒவ்வொரு கலியினும் கூறியது கூறல் ஒரே ஆசிரியரால் ஏற்படத் தக்கதும் அன்று. இக்குற்றம் பண்டைத் தமிழ்ப் புலவர்பால் ஏற்றிக் கூறல் அடாது!

(5) ஒவ்வொரு கலியினும் இரண்டோர் இடங்களில் பாண்டியன் எனவும், வையை எனவும், கூடல் எனவும் வருதல் கொண்டு செய்யுட்கள் அனைத்தும் ஒருவர் பாடியனவே[1] என்பது பொருந்தா முடியாகும். என்னை? சிலப்பதிகாரத்துள் வந்துள்ள அடிகள் பல—கருத்துகள் பல—அங்ஙனமே மணிமேகலையுள் பயிலக் காண்கிறோம். மற்றும் 'ஊதுலைக் குருகின்' என்பது போன்ற பல தொடர்களும் ஒன்றுபட்ட கருத்துகள் பலவும் சங்கப் புலவர் பலருடைய பாடல்களில் பயின்றுவரக் காண்கின்றோம். இவைகொண்டு அப்பாடல்கள் அனைத்தும் ஒரு புலவரே பாடினர் எனக்கோடல் தகுதியாமோ? எண்ணிப் பார்மின்!

'பாடியவர் ஒருவர் அல்லர்' என்பதற்கு மேலும் சில காரணங்களை ஆராய்ச்சியாளர் காட்டுவர்.[2] விரிவஞ்சி அவற்றைக் கூறாது விடுத்து; ஆசிரியர் ஒருவர் அல்லர் என்பதை மீட்டும் வற்புறுத்து மேற்செல்வாம்.

## கலித்தொகை ஆசிரியர் 'பலர்' ஆவர்

கலித்தொகை ஆசிரியர் 'ஒருவர் அல்லர்—ஐவரும் அல்லர்' என்ற முடிபானே, 'பலர் ஆவர்' என்னும் முடிபு தானே போதரும். எனினும், மேலும் இரண்டொரு காரணம் காட்டுதும்:

(1) ஆசிரியர் நச்சினார்க்கினியர் கலிச் செய்யுட்கள் 149-ல் ஒரே ஒரு செய்யுளடியில் மட்டும் (நெய்தற்கலி-25)

1. K. N. S. Pillai's 'Chronology of the Early Tamils P. 224
2. V. Venkatarajulu Reddiar's 'Kapilar,' PP. 33—35.

"தம் பேரறிவு தோன்ற ஆசிரியர் நல்லந்துவனார் செய்யுள் செய்தார்" எனக் கூறியிருத்தல் கவனிக்கத்தக்கது. அவர், "செய்யுள் செய்தார்" எனக் கூறினரே அன்றி, "இந் நெய்தற் கலி முழுதும் பாடினார்" எனக் கூறுமை காணத் தகுவது. மேலும் எந்தக் கலியையும் ஒரே புலவர் பாடினார் எனக் கூறல் பொருந்தாதென்பதற்கு மேற்காட்டிய காரணங்களையும் இத்துடன் வைத்து எண்ணுதல் வேண்டும். நச்சினார்க்கு இனியர் தம் காலத்துப் புலவர் கூற்றை நம்பி— 'இச்செய்யுள் இன்னவரது' எனக் கூறி இருக்கலாம் அன்றோ? தம் காலவழக்கை வெளியிடுதலில் நச்சினார்க்கினியர் முன்னணியில் நிற்பவர் என்பதற்கு-தொல்காப்பியப் பாயிரவுரையில் அவர் கூறியுள்ள அகத்தியர் மனைவி சம்பந்தப்பட்ட பொருத்தமற்ற ஆபாசக் கதையே சிறந்த சான்றாகும் அன்றோ[1]?

(2) கலித்தொகைச் செய்யுட்கள் பலவகைப்பட்ட நடை வேறுபாடுகள் உடையன; கூர்ந்து கவனிப்போர் சொற் செறிவையும்-சொல் தளர்வினையும், நடை மிடுக்கையும்-எளிய நடையையும், பழைய தமிழ்க் கொள்கைகளையும்-குடிபுகுந்த புதிய கொள்கைகளையும், முற்காலக் கருத்துகளையும்-பிற்காலக் கருத்துகளையும் நன்கறிந்து வியத்தல் கூடும். சுருங்கக் கூறின், கலித்தொகைச் செய்யுட்கள்—ஏனைத் தொகை நூற் செய்யுட்களைப் போலப் பலவேறு புலவரால் பாடப்பட்டவை ஆகும். கலித்தொகையை மேலும் ஆராய்ந்து முடிபு கூறல் கற்றறிந்த மாந்தர் கடன்.

## கலித்தொகையின் 'காலம்' யாது?

(1) கடைச் சங்கத்தின் இறுதிக் காலம் கி. பி. 2ஆம் நூற்றாண்டு என்பர் சரித்திரம் வல்லார். கடைச்சங்கத்

1. P. T. Srinivasa Iyengar's 'History of the Tamils', P. 224.

தொகை நூல்களுள் பல நூற்றுண்டுகளிற் பாடப்பட்ட செய்யுட்கள் உள்ளன. அவற்றுட் பல களவியலை அடிப் படையாகக்கொண்ட ஒத்த காமத்தைப் பற்றியவை. கைக்கிளை, பெருந்திணைகளைப்பற்றி அச்சான்ருேர் செய்யுட் செய்திலர். இன்றைய தொகை நூல்களில் அவை காணு மாறில்லை. பாடிய ஒத்த காமச் செய்யுட்களும் உயரிய பொருள் நோக்குடையன. ஆனல், குறிஞ்சிக்கலிச் செய்யுட்களோ அவர் மரகக்கு மாருகப் பெரும்பாலும் பொருளியல் சூத்திரங்கட்கு இலக்கியமாக அமைந்தவை; கைக்கிளை—பெருந்திணைச் செய்யுட்களைக் கொண்டவை; உயரிய பொருள் நோக்கம் ஓரளவு குறைந்தவையே ஆகும். இவ்வேறுபாட்டைச் சங்கநூற் பயிற்சி உடையோர் நன் குணர்தல் கூடும்.

(2) "மையின் மதியின் விளங்கு முகத்தாரை
வவ்விக் கொளலும் அறனெனக் கண்டன்று"

(குறிஞ்-கலி-26)

பெண்டிரை வௌவிக்கோடல் 'இராக்கத மணம்' எனப்படும். இராக்கத மணத்தைத் தொல்காப்பியர் கூறிற் றிலர். 'பெருந்திணை-ஒவ்வாத காமம்' எனத் தொல்காப்பி யர் கூறினரே அன்றி, இராக்கதர் மணமுறையாகிய வௌ விக் கோடலைத் தமிழ் மக்கள் கையாண்டனர் எனக் கூறிலர். 'இராக்கத மணம் அறன்' எனத் தொல்காப்பியரோ சங்க நூற் கலவரோ யாண்டும் கூறிற்றிலர். ஆரியருடைய எண் வகைமணங்களுள் 'இராக்கத மணம்' ஒன்ருகும். தமிழர்க்கு இம்மணம் உண்டென யாம் இதுகாறும் கேட்டதில்லை. அடியோர் தலைவரைக் கொள்ளினும், தமிழகத்துள் அடிப் பட்ட பழக்கத்துக்கு மாருகச் சங்கத்துச் சான்ருேர் செய்யுள் செய்யார். ஆகவே, 'இராக்கத மணம் அறன்'

எனக் கூறும் இச் செய்யுளும் இதுபோன்ற கலிச்செய்யுட்களும் கடைச்சங்கப் புலவர்க்குப் பிற்பட்ட—ஆரியக் கோள்கைகள் அறனெனக் கருதப்பட்ட காலத்தனவாகும் என்பதைக் கூறவும் வேண்டுமோ?

(3) குறிஞ்சிக்கலிச் செய்யுள் ஒன்றில் தலைவி, "தோழி, நீ தெருவில் போவார்க்கெல்லாம் இரங்குதல்—வாரண வாசியில் (காசியில்) பிறர் வருத்தம் தம் வருத்தமாகக் கருதும் அருளுடையார் செயலை ஒத்துள்ளதே" (24) எனக் கூறியுள்ளது கருதற்பாலது. ஏனைய தொகை நூல்களுள் யாமறிந்தவரை இச்செய்தி காணப்பட்டிலது. 'வாரணவாசி' (காசி) நகர மாந்தர் செய்தி எந்த அளவு தமிழகத்தில் பரவி இருந்தால், அதனைத் தலைமகள் வாயில் வைத்துப் புலவர் பாடியிருப்பர் என்பது சிந்திக்கத்தக்கது. ஏனைய பழம் பாடல்களில் காணப்பெறுத இவ்வடநாட்டுச் செய்தி சங்க காலத்திற்குப் பிற்பட்டதென்பதில் ஐயமுண்டோ?

(4) ஏனைய தொகைச் செய்யுட்களில் காணப்படாத முன்னிலைப் பன்மைச் சொல்லாகிய 'நீர்', பலர்பாற் சொல்லோடு 'கள்' விகுதி சேர்த்துக்கூறல், 'செய்யும்' என்னும் வாய்பாட்டு வினைமுற்றுப் 'பலர் பாலில் வரல்' போன்றவை கலித்தொகைச் செய்யுட்களில் காணப்படுகின்றன. மேலும்; 'நின்றீத்தை, போசீத்தை' (மருதக்கலி—29) எனவும், 'இல்லானும், பாடித்தை, இஃதோத்தன். (குறிஞ்சிக் கலி—22, 4, 25) எனவும் பல சொற்கள் மாறுபட்டுச் செய்யுட்களில் இடம் பெற்றன என ஏனைத் தொகைச் செய்யுட்களைக் கொண்டு கூறுதல் இயலாது' இவை, இத்திணைகளைப்பற்றியே பாடப்பட்ட சங்ககாலப் புலவர் பழம் பாடல்களில் பயின்றில என்பதை நோக்க,

இச்சொற்களைக் கொண்ட செய்யுட்கள் பிற்காலத்தன எனல் கூறுமலே விளங்கும்.

(5) குறிஞ்சிக்கலியுள் ஐந்திணைபற்றிக் கூறற்குரிய அரிய செய்திகளை ஏனைச் சான்றோரைப் பின்பற்றிக் கூறுதலை ஒழித்து, அவரால் கனவிலும் கருதப்படாதவை யும் சொல்லப்படாதவையுமான கைக்கிளை—பெருந்திணைச் செய்திகளையும் (இவற்றை 'ரஸாபாஸம்' என்பவர் வட நூலார்) இழிந்தோர் களவினையும், மருதக்கலியுள் கூனும் குறளும் உறழ்ந்து கூறலும் புணர்தலும் (29) போன்ற செய்திகளையும், 'தேள் கொட்டி ஏறும் விஷம்போலக் காமம் தலைக்கேறுகிறதோ?' என்றாற் போலக் கூறப்படும் முல்லைக்கலிச் செய்திகளையும், இவை போன்றே ஏனைய கலிகளிலும் வெறுக்கத்தக்க—பண்டைப் புலவர் நெறிக்கு மாறாகக் கூறப்படும் செய்திகளையும் அச்சங்க காலப்புலவ ரோடு இருந்த சான்றோர் பாடியிரார் என்பது சாதாரண அறிவும் நடுவுநிலைமையும் உடையார் நன்கறிதல் கூடு மன்றே? இவற்றுக்கு இலக்கணம் தொல்காப்பியத்துள் காணப்படினும், இவற்றைப் பிற்காலத்துப் புலவர்கள் பாடினார்கள் எனக் கோடலே அறிவிற்கும் ஆராய்ச்சிக் கும் பொருத்தமாகத் தெரிகிறது. அறிஞர் ஆய்வாராக!

(6) காமன் ஆரியக் கடவுள். அவன் (காலத்தால் மிகப் பிற்பட்டதான பரிபாடல் தவிர) ஏனைய தொகை நூல்களில் இடம் பெற்றிலன். அவன் ஏனைய தொகை நூல்களுள், 'காமனார்' எனவும், 'சாமனார்க்கு மூத்த காமனார்' எனவும் மருதக் கலியுள் (செ. 29) கூறப்பட் டாற்போலக் கூறப்பட்டிலன். காமனைப் பற்றிய இச் செய்திகள் பிற்காலச் சமண பௌத்த காவியங்களிலும் ஆண்டாள் பாசுரத்திலும் பெருங்கதையிலும் காணப்படு

கின்றன.[1] கி. பி. 6-ஆம் நூற்றுண்டிற்குப் பிற்பட்ட சிந்தாமணியில் காமன் கோட்டம் கூறப்படுகிறது. கி. பி. 9-ஆம் நூற்றுண்டினதெனக் கருதப்படும் களவியல் உரையில், "அடு சிலேயோடு கணை ஏந்தி வடிவு கொண்ட காமன் போலச் சென்று" என வருதல் காண்க. எனவே, 'காமன்' என்னும் கடவுளும், 'அவன் சாமனுர் தமையன்' என்னும் செய்தியும் கி. பி. 2-ஆம் நூற்றுண்டுக்கு முற்பட்ட கடைச்சங்க காலத்துப் பழம் பாடல்கட்குப் பிற்பட்டனவே எனல் தவறுகாது.

(7) "மலிதிரை யூர்ந்துதன்" எனவரும் முல்லேக் கலி அடிகள் தமிழகத்துக் கடல்கோள் ஒன்றைக் குறிப்பதாம். அக் கடல் கோள் எதுவாயினும், கி. மு-வில் நடந்ததாகவே சரித்திரம் கூறுகிறது; கி. மு. 504, கி. மு. 306 — இவ்விரு காலங்களில் ஒன்முக இருக்கலாம். மிகக் குறைவாகக் கொள்ளினும், இதனைக் கி. மு. 4-ஆம் நூற்றுண்டில் நடந்த நிகழ்ச்சி எனலாம்.[2] இதுபற்றி வரும் செய்யுள், ஓரளவு மற்றப் பாக்களினும் முற்பட்டதாதல் முறையே அன்ருே? இங்ஙனம் சில செய்யுட்கள் இக் கலித்தொகையில் கடைச்சங்கத்தனவாக இருக்கலாம் என்று கூறவும் இடந் தருகின்றன. சில, நடை வேறுபாட்டாலும் பிறவற்ருலும் பிற்காலத்தனவாகக் காண்கின்றன.

(8) கால முறைப்படி ஆராயினும், கலித்தொகை பாடியவராகக் கருதப்படும் புலவர் ஐவரும் (அவரே பாடி

1. Dr, V. Swaminatha Iyer's 'Sangakalathamil, P. P. 65, 66.
2. Vide My "தமிழ் யாப்பிலக்கண நூல்கள்" In Sentamil Selvi, vol. 15, p. 320.
M. S. Ramaswamy Iyengar's 'Studies in S. I. Jainism' p. 39.

யவர் எனக்கொள்ளினும்) வேறு வேறு காலத்தவர் ஆகின்றனர். எனவே, கலித்தொகைச் செய்யுட்கள் பத்துப் பாட்டைப் போலச் சில நூற்றாண்டுகளிற் செய்யப்பட்டவை யாதல் வேண்டும்.[1]

(9) கலித்தொகை முழுவதிலும் எந்த அரசன் பெயரும் சுட்டப்படவில்லை. மூவேந்தருள் பாண்டியனே சுட்டப்படுகிறான். வையை, கூடல் இவையே சுட்டப்படுகின்றன. ஏனைய தொகை நூல்களிற் கூறப்படும் வள்ளல்களோ புலவரோ சுட்டப்படவில்லை. மேற்கோள் காட்டத்தகும் இடங்களில் 'வாரணவாசிப்பதம்' போன்ற வடநாட்டுச் செய்திகளும், பிற்காலப் புராணக் கதைகளும், தெய்வங்களுமே குறிப்பிடப்பட்டுள. ஏனைய அகப்பாட்டுகளில் பெரும்பாலான செய்யுட்களில் வந்துள்ள தமிழ்ப்புலவர் பெயர்கள், வள்ளல்களின் பெயர்கள், அரசர்கள் பெயர்கள், போர்கள் முதலியன போன்ற தமிழகச் செய்திகளுட் சிலவேனும் 149 செய்யுட்களைக் கொண்ட கலித்தொகையில் பயின்று வாராமை நன்கு கவனித்தற்குரியது. இத் தக்க ஒரு காரணம் கொண்டே கலித்தொகைச் செய்யுட்களுட் பெரும்பாலன கடைச்சங்க காலத்திற்குப் பின்னரே செய்யப்பட்டவை என வற்புறுத்துக் கூறலாம்.

(10) கி. பி. மூன்றாம் நூற்றாண்டிற்குப் பின்னரே தமிழகம் 'களப்பிரர்' படையெடுப்புக்கு உட்பட்டது; சோழரும் பாண்டியரும் முடியிழந்து சிற்றூர்களிற் புகுந்தனர்; அமயம் வாய்த்தபோது தம் ஆட்சியை நிலைநிறுத்தப் போரிட்டனர். தமிழகம் இம்மாறுபட்ட ஆட்சியாலும் பல்லவர் நுழைவாலும் கி. பி. 4-ஆம் நூற்றாண்டு முதல் 6-ஆம் நூற்றாண்டு வரை அல்லற்பட்டது; யாண்டும் குழப்

1. K. N. S. Pillai's The Chronology of the Early Tamil's p. 225.

பம்; யாண்டும் போர்.[1] களப்பிரரும் பல்லவரும் வட மொழியையும் சமண மதத்தையும் நாடெங்கும் பரப்பினர்; ஆரியர் கொள்கைகளும் மொழியும் நாட்டில் நன்கு வேரூன்றிய காலம் இதுவேயாகும். கி. பி. 6-ஆம் நூற்றாண்டின் இறுதி முதல் அப்பர் சம்பந்தர் முதலிய சைவ சமய ஆசாரியரும் ஆழ்வார்களும் தோன்றிச் சைவ வைணவ மதங்களைப் பரப்ப முனைந்து விட்டனர்; புராண கதைகளும் ஆரிய மதக் கோட்பாடுகளும் மிகுதியாக இப் பிற்காலத்தில் இடம் பெற்றன. இப் பிற்கால மதக்கொள்கைகள் தோன்றியபின் தொகை நூல்கள் செய்யப்பட்டிரா. என்னை? அது, மதத்தொடர்பான காவியங்கள் தோன்றி ஆதரிக்கப்பெற்ற காலமாதலின் என்க.

எனவே, இதுகாறுங் கூறிய பற்பல பொருத்தமான காரணங்களால் கலித்தொகைச்செய்யுட்களின் காலம் ஏறத்தாழ கி. மு. 2-ஆம் நூற்றாண்டிலிருந்து கி. பி. 6-ஆம் நூற்றாண்டு முடியவாகும் எனக் கோடல் ஒருவாறு பொருந்தும். அஃதாவது, கலித்தொகைச் செய்யுட்களும் ஏனைய தொகைநூல் செய்யுட்கள் போலப் பல நூற்றாண்டுகளில் பாடப்பட்டவையாகும். ஆயின், பிற தொகை நூற் செய்யுட்களின் கடைப்பட்ட காலம் கி. பி. 3-ஆம் நூற்றாண்டாயின், கலித்தொகைச் செய்யுட்களின் கடைப்பட்ட காலம் கி. பி. 6-ம் நூற்றாண்டாகும். கலித்தொகையின் காலம் கி. பி. 6-ஆம் நூற்றாண்டென்பர் திரு. பி. டி. சீனிவாச ஐயங்கார்[2]. இதுகாறும் இம்முற்பகுதியில் கூறி வந்த பற்பல அகச்சான்றுகளாலும் புறச்சான்றுகளாலும் இரண்டு செய்திகள் நன்கு வெளியாம். அவை :

1. Dr. S. K. Iyengar's Introduction to 'The Pallavas of Kanchi' by R. Gopalan.

2. Vide his 'History of the Tamils', p. 582.

1. கலித்தொகைச் செய்யுட்களின் ஆசிரியர் ஒருவர் அல்லர்; ஐவரும் அல்லர்; 'பலர்' ஆவர்.

2. கலித்தொகைச் செய்யுட்களுட் பெரும்பகுதியின் காலம் கடைச் சங்கத்துக்குப் பிற்பட்டது.

இவை முடிந்த முடிபுகள் அல்ல. ஆராய்ச்சியே முடிவற்றது. ஆதலின், 'இம்முடிபுகள் பொருந்துவனவா?' என்பதைத் தமிழ் அறிஞர் காய்தல் உவத்தல் இன்றி ஆராய்வாராக!

## II

## குறிஞ்சிக் கலி

### பொது இயல்பு

குறிஞ்சிக் கலி, கலியின் வகையாகிய கலிவெண்பா, ஒத்தாழிசைக் கலி, கொச்சகக் கலி முதலியவற்றால் ஆகிய 29 செய்யுட்களை உடையது. இச்செய்யுட்கள் பல பொருள் பற்றியன; பல துறைப்பட்டன. இவற்றுள் சில நாடக வழக்காகக் கொள்ளத்தக்கவை; சில உரையாடற்கு ஏற்றவை; சில உள்ள நிகழ்ச்சிகளை ஓவியமாக வெளியிடுந் தன்மைய. இவை நாடக வழக்கிற்கே பெரிதும் உரிமையுடையவை எனல் பொருந்தும்.[1] பல செய்யுட்களின் நடை சங்கப் பழம் பாடல்களினும் எளிமையும் இன்னோசையும் உடையது. ஒரு முறைக்கு இருமுறை மூலத்தை நன்கு வாசிப்பின், பொருள் நன்கு விளங்கும். எனினும், இதற்குள்ள நச்சினார்க்கினியர் உரை பெரிதும் போற்றத்தக்கதே. ஒரு சில இடங்களில் பொருள் அமைதி கெட்டிருப்பினும்,[2] பெரும் பகுதி நுட்ப அறிவோடு கூடியதே.

---

1. தொல்: அகத்: 53.
2. V. V. Reddiar's 'Kapilar' pp. 156—158.

ஏனைய தொகை நூல்களுள் குறிஞ்சித் திணையில் இடம் பெறாத கைக்கிளையும் பெருந்திணையும் இக் குறிஞ்சிக் கலியில் இடம் பெற்றிருத்தல் கவனித்தற்குரியது.

களவுக்கூட்டம் ஏற்படும் முறையிலும் ஏனைய நூற் செய்திகட்கும் இந்நூற் செய்திகட்கும் ஓரளவு மாறுபாடு உண்டு. இப்பகுதியில் வள்ளைப்பாட்டும், வரைவு கடாத லும், கைக்கிளையும் பல முறை (Repition) கூறப்பட்டுள.

சுருங்கக் கூறின், இக் குறிஞ்சிக்கலிச் செய்யுட்கள் களவியல் சூத்திரங்களையும் பொருளியற் சூத்திரங்களையும் அகத்திணையியற் சூத்திரங்களையும் துணைக்கொண்டு எழுந் தவை என்னல் மிகையாகாது.

இக் குறிஞ்சிக் கலிச் செய்யுட்கள் படிக்கப் படிக்க ஓரளவு இன்பம் பயப்பன; பல பாக்களில் பொருட் செறிவு உண்டு. விரிவஞ்சிப் பல நலங்களைக் கூறாது விடுக்க நேர்ந் தமை குறித்து வருந்துகின்றேம்.

## 1. காதல் வழிபாடு

தலைவி கூற்று :

1. "ஒரு தலைவன் என்னைக் கண்டு காதல் கொண் டான்; கொண்ட காதலைக் கூறாய், என்னைத் தன் நோய் புலப்படப் பார்த்துப் பல நாளும் மீண்டான். பல நாளும் அவன் வந்து வந்து போதலைக் கண்ட யான், அவனைப் பற்றியே நினைவுகொண்டேன்; இரவில் தூக்கம் பெற்றி லேன்; அவனோ தன் குறையைக் கூறிலன்; எனக்கோ அவனை நோக்கி 'நின் வருத்தத்திற்கு நானும் வருந்தினேன்' எனக் கூற நாணம் இடம் தந்திலது. ஆயினும், இந்நிலைமை நீட்டிப்பின் அவன் இறந்துபடுவனே எனக் கவன்று, நாணமற்ற செயல் ஒன்றைச் செய்தேன் : யான் ஒருநாள் ஊசலாடிக் கொண்டிருந்தபோது தலைவன் அங்கு வழக்கம்

போல வந்தான்; யான் நாணம் இழந்து, 'ஐயனே, சிறிது பொழுது என்னை ஊசலாட்டுவாயாக' என்றேன். அவ்வளவில் புத்துயிர் பெற்ற தலைவன், 'தையால், நீ கூறியது நன்று' என்று ஊசலாட்டினான். அவ்வெல்லை யான் கைந்நெகிழ்ந்து வீழ்ந்தேனாக அவன் கருதும்படி அவன் மார்பின்கண் வீழ்ந்தேன். அதனை அவன் உண்மையாகக் கருதி, என்னை விரைய எடுத்து அணைத்துக்கொண்டான். யான் 'பிறர் காண்பர்' என விரைய, 'ஒண்குழாய், நீ போ' என்று கூறிக் கண்ணோட்டஞ் செலுத்தினான். அதனால் நான் மெய்ம்மறந்து அவன்மீது கிடந்தேன்." (செ. 1)

2. "தோழி, இதனைக் கேள்: நாம் பண்டு சிற்றில் இழைத்துச் சிறுசோறு சமைத்து விளையாடியபோழ்து நம் சிற்றிலைக் காலால் அழித்துத் துன்பம் செய்த பட்டிமகன் ஒருநாள் யானும் யாயும் வீட்டில் இருந்தபோது வந்தான்; 'நீர் வேட்கை' என்றான். அன்னை பொன் சிரகத்தில் நீர் தந்து என்னை அனுப்பினாள். யான் அவனுக்கு நீர் தந்த போது அவன் என் முன்கையைப்பற்றி நலிந்தான்; யான், 'அன்னாய், இவன் செயலைக் காண்' என்றேன். அன்னை அலறிப் படர்ந்தாள். யான் உண்மை கூறாது, 'இவன் உண்ணுநீர் விக்கினான்' என்றேன். அன்னை அவன் முதுகைத் தடவினாள். அப்போழ்தவன் என்னைக் கடைக்கண்ணாற் கொல்வான்போல் நோக்கித் தன் மகிழ்ச்சியைப் புலப்படுத்தினான்." (செ. 15)

3. ஒருவன், 'மெல்லிய தோளையுடையாய்! நின் அடியில் யான் உறைதற்கு நீ அருள்வாய்' எனக்கூறி, எனது சடைமாலை ஒன்றைத் தன் விரலால் முறையாகச் சுற்றி, அதனை மோந்து பார்த்தான். என் கையைக் கொண்டு தன் கண்களை மறைத்துப் பெருமூச்செறிந்தான்;

என் தோளில் எழுதிய நகில்களை இனியவாகத் தடவி ஞன்; என் மெய்ம்முழுவதும் இன்பம் பெறத் தழுவினன்; அச்செயலால் யான் அவன் கைப்பட்ட வருத்தத்தைப் போக்கினேன். ஆதலின், இச் செயலை யாய் முதலியோரிடம் கூறி, அவனுக்கே என்னை மணம்புரியச் செய்வாயாக." (செ. 18)

இம்மூன்று செய்திகளாலும் தலைவனும் தலைவியும் நட்புப் பெறுதல்—நட்புப் பெறும் முறை—இருவர் கருத்தும் ஒருமைப்படல் இன்ன பிறவும் நன்குணரலாம்.

## 2. நாடகக் காட்சி

20, 21, 22, 23, 26, 28, 29 முதலிய எண்ணுள்ள செய்யுட்களில் வருஞ் செய்திகள் சிறந்த நாடகக் காட்சிகளாக இடம்பெறத் தக்கவை. காட்டாக 20-ஆம் செய்யுளை இங்குக் காட்டுவோம் :

காமஞ்சாலா இளமைப்பெண் சிறந்த அழகுடன் காட்சி அளிக்கிறாள். அவளைக் கண்ட இளைஞன் ஒருவன், "பூவும் மயிரும் தம்முள் மயங்கும்படி முடித்துக்கொண்டு இங்கு வருபவள் யார்? கொல்லிமலைப் பாவையோ? நல்லார் உறுப்பெலாங்கொண்டு வல்லான் வகுத்த அழகியோ? பெண்ணுருவம் கொண்ட கூற்றமோ? இல்லை. இவள் இவ்வூர் மகளாகவே காணப்படுகிறாள். இவளைக் காத்தவர் இவ்வாறு தனியே விடுதல் கொடிது" என்கிறான். பின்னர் அவன் அவளை நோக்கி, "நல்லாய், யான் கூறுதலைக் கேள்" என்று அவளைத் தடுத்து,

"கண்டவர் காதல் கொள்ளும் பண்புடையாளே, உன்னுடைய அன்ன நடையும், மயிற் சாயலும், புறவின் மடப்பமும் - கண்டோர் கருத்தை ஈர்க்கும் என்பதை நீ அறிவாயோ? அறியாயோ?

"நிறத்தாலும் திரட்சியாலும் மூங்கிலை ஒத்தும் மென்மையால் அணையை ஒத்தும், காமக்கடலை நீந்தத் தெப்பமாதலால் புணையை ஒத்தும் விளங்கும் நின் தோள்கள்—நின்னைக் கண்டார்க்குத் துன்பம் செய்யும் என்பதை நீ அறிவாயோ? அறியாயோ?

"கோங்கின் இளமுகை போன்றதும், அடிவரைந்து கட்புலனுன குரும்பை போன்றதும், மழை மொக்குளைப் போன்றதும் ஆகிய நின் இளைய முலைகள்—நின்னைக் கண்டார் உயிரை வாங்கும் என்னும் நிலைமையை நீ அறிவாயோ? அறியாயோ?" எனக் கேட்கிருன்.

அவள் பேசாது நிற்கின்ருள்; போக முயல்கின்ருள். அவ்வெல்லை, அவன், "பதில் கூருது செல்பவளே, யான் கூறுவதைக் கேள்: நீயும் தவறிலை; உன்னைப் புறப்படச் செய்த நுமரும் தவறிலர்; மதம் பிடித்த யானையைப் பறை அறைந்த பின் வெளிச்செல்ல விடுதல் போலப் பறை சாற்றிய பின் உன்னை வெளியே வரவிடச்செய்யாத அரசனே தவறுடையான்" என்று முடிக்கின்ருன்; காட்சி முடிகிறது. இத்தகைய இனிய காட்சிகள் இக்கலியில் பலவாகும்.

## 3. உரையாடல்

தோழியும் தலைவியும், தோழியும் தலைவனும், தலைவனும் தலைவியும் ஆக உரையாடும் செய்யுட் பகுதிகள் நிரம்பியது இக் குறிஞ்சிக்கலி. குரவையாடுகையில் உரையாடலும் (செ.3), வள்ளைப்பாட்டில் உரையாடலும் (செ. 4, 5, 6, 7) இன்பச்சுவை பயப்பன. செ. 25-ல் தோழிக்கும் தலைவற்கும் நடைபெறும் உரையாடல் நகைச்சுவை பயப்பது.—செ. 26-ல் தலைவி தலைவன்மீது காமப் பழி சுமத்தலும் அவன் பதில் கூறலும் அவள் முடிபு கூறலும் கற்ருேர் இதயம் களிப்பிக்கும். காட்டாக ஒன்று காட்டுதும்:

[பாறையாகிய உரலில் மூங்கில் நெல்லை யிட்டு, யானைத் தந்தமாகிய உலக்கையால் குற்றிக்கொண்டே தோழியும் தலைவியும் பாடுதல்; இங்குத் தலைவி தலைவனை இயற்பழிக்கிறாள்; தோழி இயற்பட மொழிகிறாள்.]

தலைவி:—என்ன வியப்பு! சூள் பொய்த்த நம் தலைவன் மலையில் உள்ள அருவி நிறைய நீர் இருக்கிறதே!

தோழி:—சூள் பொய்த்தவனோ? அவன் சூளில் பொய் தோன்றுமாயின், அது திங்களில் தீத்தோன்றியது போலாம்.

தலைவி:—என்னிடம் கூறியபடி வாராதவன் மலையில் இளமழை ஆடுகின்றதே, என்ன வியப்பு!

தோழி:—வாராதிருப்பனோ? அவன் அருளிடத்தே கொடியது தோன்றும் என்பது குளத்து நீரில் உள்ள குவளை வெந்தது போலாம்.

தலைவி:—என் உடலைச் சேராது துறந்தவனது மலை நீல மணி போலத் தோன்றுகிறதே, என்ன வியப்பு!

தோழி:—தலைவன் நம்மைத் துறப்பவன் அல்லன், அவன் உறவில் கொடியவை தோன்றல் என்பது ஞாயிற்றுள் இருள் தோன்றியது போலாம்.

[இவர்கள் இங்ஙனம் பாடிக்கொண்டே நெற்குற்று தலைத் தலைவன் சிறைப்புறமாக இருந்து கவனிக்கிறான்; 'நாம் இவளை மணக்கத் தாழ்த்தலால் வருந்தியன்றோ தலைவி நம்மை இயற்பழிக்கிறாள்; ஆதலின், உடனே விரைந்து மணமுடித்தல் நலம்' என முடிவு செய்கிறான்; மணம் பேச வரும் அவனைத் தலைவியின் தந்தை ஏற்று, வேங்கை மரத்தடியில் அமர்ந்து மணம்பேசி முடிக்கிறான்.]

இப்பகுதி உரையாடற்கே அன்றி நாடகக் காட்சிக்கும் சிறந்த காட்டாகுமன்றோ?

## 4. சுவை பயக்கும் செய்திகள்

### கானவன் விட்ட கவண்கல்

இரவில் யானையின் காலடி ஓசையைக் கேட்ட தினைப் புனக் கானவன், ஓசை வந்த திசை நோக்கிக் கவண் கல்லை வீசிவிட்டனன். அக்கல் வேங்கைப் பூக்களைச் சிதறச் செய்தது;[1] கனிந்த ஆசினிப் பலாப் பழங்களை உதிர்த்தது;[2] தேன் அடையைத் துளைத்தது;[3] மாங்கொத்துகளை உழக்கியது;[4] வாழை மடலைக் கிழித்தது;[5] இறுதியில் பலாப்பழத்துள் தங்கிவிட்டது.[6] (செ. 5).

### யானையின் கனவும் நனவும்

யானை புலியோடு போரிட்டு வென்றது; வென்ற வருத்தத்தோடே தூக்கத்தில் ஆழ்ந்தது; அதன் நனவே கனவில் தோன்ற வெருவி எழுந்தது; அருகில் மலர்ந்திருந்த வேங்கை மரத்தைப் புலி என நினைந்தது; கொண்டது சீற்றம்; அதனைத் தன் வலிய கொம்புகளாற் குத்தி அதன் எழிலைக் கெடுத்தது; சினம் தணிந்த பின்னரே தான் தாக்கியது மரம் என்பதை அறிந்தது; அறிந்ததும் நாணித் தலை கவிழ்ந்தது. [இத்தகைய குறிஞ்சி நில விலங்குகளின் செயல்கள் பல இப்பகுதியிற் கூறப்பட்டுள.] (செ. 10)

### சொல் நயம்

1. தோழி, இரவில் வருந் தலைவனை ஆறிடத் தருமை கூறிப் 'பகல் வருக' என்றல்:—"ஐயனே, நீ இத் தலைவிபால் காதல் உடையை என்பதோ இனிது; ஆனால், இடி என்றும் மழை என்றும் பாராமல் அஞ்சத்தக்க இரவில் நீ வருதல் இன்னாது. நீ, இவள்பால் அன்புடையை என்பதோ இனிது. ஆனால், முகில்கள் படியும் மலைக்கணவாய் வழியே நீ இரவில் வருதல் இன்னாது. நீ இவள்பால்

அருள் உடைமை என்பதோ இனிது; ஆனால், யானை உலவும் அரிய வழியில் நீ வேலேந்தி வரல் எமக்கு இன்னாது." (செ. 13).

2. தோழி, இரவில் தலைவனது வருகை துன்பமானது எனக் கூறி விரைவில் மணஞ்செய்து கொள்ளுமாறு தலைவனைத் தூண்டுதல் :—"தலைவி செய்த குறியிடத்தே நீ இராப்போதில் வரின், மலையில் நின்று பலியைக் கொள்ளும் அணங்கு என்று கருதி இவ்வூரார் நின்னை அஞ்சுவர். நீ செய்யும் கொம்பொசை கேட்கின், கல்லெறியும் கவணையும் எரியும் கொள்ளியையும் வில்லையும் உடைய கானவர், யானை வந்ததென்று கருதி ஆரவாரம் செய்வார்கள். நீ குறியிடத்து வருங்கால் நின்னைக் கண்டு விலங்கு முதலியன அஞ்சி ஓடும் ஓசையாலே நின்னைப் புலி என்று இவ்வூர் எண்ணுமே!

"ஒப்பற்ற அறிவுடையாய், இக்களவு ஒழுக்கம் ஊரார் அறியின் தலைவி உயிரோடிராள்; அவளின்றி யான் வாழேன்; ஆதலின், நீ பலர் அறிய மணத்தலை விரும்புகிறேன். நீ அப்போது புதியவன் போல் வரும் நின் வரவையும், தலைவி, மணத்தில் தோன்றிய நாணால் ஒடுங்கியிருக்கும் ஒடுக்கத்தையும் யான் காண அவாவுகின்றேன்." (செ.16)

தோழி தலைவனது துன்ப நிலையைக் கூறித் தலைவியை உடம்படுத்த முயலும் முறையும் அதற்குத் தலைவி கூறும் பதிலும் (செ. 24, 25) படித்துச் சுவைத்தற்கு உரியன. என் செய்வோம்! விரிவஞ்சிக் கூறாது விடுக்கின்றோம்.

பெருந்திணைப் பேச்சு

தலைவன் :—நின் உடல் புல்லற்கு இனிதாயிருந்ததாற் புல்லினேன்.

தலைவி :—தமக்கு இனியதென்பதொன்றே கொண்டு, பிறர்க்கின்னாததைச் செய்வது இன்பந் தருமோ ?

தலைவன் :—தண்ணீரைப் பருகுபவர் தமக்கு இனிதென்று பருகுவரே அன்றி, அது நீர்க்கு இனியதெனப் பருகுவரோ'? (செ. 26)

நகைச் சுவை

தோழி, தலைவியிடம் தலைவன் சிறைப்புறத்தானாகக் கூறல் :—

"நேற்றிரவு நடந்த வேடிக்கையைக் கேள்: தலைவன் வரவை எதிர்நோக்கி யான் வெண்துகிலைப் போர்த்துக் கொண்டு நள்ளிரவில் குறியிடம் சென்று நின்றேன். மயிர் அற்ற தலையும் கருங் குட்டத்தால் குறைந்த கையும் காலும் உடைய நாம் அறிந்த முடமாகிய முதிர்ந்த பார்ப்பான் அங்கு இருந்தான். அவன் என்னை நோக்கி, 'பெண்கள் நிற்கத்தகாத இந் நள்ளிரவில் வந்து இங்கு நிற்கும் நீ யார்?' என்று முற்படக்கூறி, 'சிறியவளே, நீ என்னிடம் அகப் பட்டாய்' என்று கூறிப் பையெனப் பணிந்து, வைக் கோலைக் கண்ட முதிய எருதுபோல என் பக்கத்தினின்றும் போகாது நின்றான்; நின்று, 'தையால், தம்பலம் தின்பாய்' என்று தன் பையைக் குலைத்து, 'நீ எடுத்துக்கொள்' என்றான். யான் வாய் திறவாமல் நின்றேன். அவன் அஞ்சினான்; சிறிது எட்ட நின்று, 'நீ பெண்பாற் பசாசு; யான் ஆண்பாற் பசாசு. எனக்கு அருள் செய்; இன்றேல், நீ பெறும் பலியை ஊராரைக்கொண்டு நிறுத்துவேன்' என்று பல பேசினான். யான் உடனே ஒரு கையால் மணலை அள்ளி அவன்மீது விடாது தூவினேன். அவன் ஊரார் கேட்க அலறி ஓடினான். அக்காமுகன் நேற்றிரவு செய்த நாடகம் இது காண். தலைவனைக் காணச்சென்ற

இடத்தே அக்காமுகன் இருந்த தன்மை—புலியைப் பிடிக்க வைத்த வலையிலே குறுநரி அகப்பட்ட தன்மையாயிற் றன்றோ ?'' (செ. 29.)

இத்தகைய சுவை பயக்கும் செய்திகள் இக் கலியில் மேலும் பல வுள. அவற்றை நூல்கொண்டுணர்க.

## 5. உவமைகள்

குறிஞ்சிக் கலியுள் உள்ளுறை உவமங்கள் பல உள; ஒரு சில அணி வகைகள் உள; 124 உவமைகள் இருக்கின்றன.[1] அவற்றுள் காட்டாக ஆறு தருதும்:

1. சிவபெருமான் உமையம்மையோடு இருந்த கைலையை ஐயிருதலையுடை அரக்கர் கோமான் பெயர்க்க முயன்று முடியாது கதறியதுபோல—யானை (புலியென நினைந்து) வேங்கை மரத்தைத் தன் கோட்டாற் குத்தி, அதனை மரத்தினின்றும் வாங்கமாட்டாது மலைப்பக்கம் எல்லாம் கேட்கும்படி ஓசையிட்டு அலறியது. (செ. 2)

2. கற்புடை மகளிர் நாணி இறைஞ்சு நிலைபோலத் தினைக் கதிர் முற்றித் தாழ்ந்து இருந்தது. (செ. 4)

3. எதிர் எதிராக இருக்கும் மலைகளிலிருந்து அருவி நீர், இடை நிற்கும் வேங்கை மரத்தின்மீது பாயும் தன்மை —இரண்டு யானைகள் பூவோடு கூடிய நீரைத் தாமரை மலர்மீதுள்ள இலக்குமிமீது சொரிதலைப்போன்று இருந்தது. (செ. 8)

4. யானையும் புலியும் சண்டையிட்டபோது வண்டு, வேங்கைப் பூங்கொம்பென்று கருதி வேங்கையைச் சூழ்ந்தும், வேங்கைச் சினை என்று யானை முகத்தை அணுகியும் அலைந்துகொண்டிருந்த நிலைமை — போர் தொடங்கிய

1 N. M. V. Nattar's 'Kapilar' p. 128.

மன்னர் இருவரை நட்பாக்குவார், பலகாலும் இருவர் பாலும் போதலும் வருதலுமாகிய நிலைமையை ஒத்திருந்தது. (செ. 10)

5. மிடிப்பட்ட அறிவுடையோர் தமது நிலைமையைக் கூறி உதவிபெற விழைந்து அணுகினர்பால் அதனைக் கூறத் தொடங்கிப் பின்னை அதனை முடியச் சொல்லமாட்டாதிருப்பாரைப்போல—தலைவன் தோழியிடம் தன் குறை அறிவிக்கச் சென்று, அதனைக் கைவிட்டு அவளைப் பலகாலும் பார்த்தான்; பின்னை அவள் நோக்கத் தலைவன் மெத்தெனத் தலையிறைஞ்சி நின்றான். (செ. 25)

6. தலைவன் அருள் பெறாத தலைவி—

i. நீர் அற்ற வயலானாள்.
ii. பொருள் இல்லான் இளமை போன்றாள்.
iii. அறம் சாரான் மூப்பே போன்றாள்.

தலைவன் அருள்பெற்ற தலைவி—

i. கார் பெற்ற வயலானாள்.
ii. அருள் வல்லான் ஆக்கம் போன்றாள்.
iii. திறம் சேர்ந்தான் ஆக்கம் போன்றாள். (செ. 2)

## 6. தெய்வங்கள்

குறிஞ்சிக் கலியுள் கூறப்பெற்றுள்ள தெய்வங்கள் :—

1. சிவபிரான் } இமயமலையில் இருத்தல்; இராவ
உமையம்மை } ணன் கைலையைப் பெயர்த்தல். (செ. 2)

2. தெய்வ மகளிர்—இவர்கள் பந்தாடிய இளைப்புத் தீர மலையருவியில் நீராடல் உண்டு (செ. 4).

3. வரையுறை தெய்வம்—இதற்குப் பலியிடல் குறவர் மரபு (செ. 3, 16).

4. முருகக் கடவுள்—குறவர் திணைநிலத் தெய்வம்: குறத்தியர், தலைவனுக்கும் முருகற்குமாக ஏற்ப வள்ளைப்பாட்டுப் பாடல் மரபு (செ. 7).

5. கஜலக்ஷ்மி—இஃது ஏனைய தொகை நூல்களில் அருகியே காணப்படுகிறது (செ. 8).*

6. பிரமன்—இவன் 'வல்லவன்' (படைத்தல் தொழிலில்) எனப்படுகிறான் (செ. 20).

## 7. புராண கதைகள்

1. சிவபெருமான் இமயமலையை வில்லாகக் கொண்டது (செ. 2).

2. இராவணன் கைலையைப் பெயர்த்தது (செ. 2).

3. வீமன் துரியோதனன் குறங்கினை அறுத்தது (செ. 16).

4. திருமால் மல்லரை அடக்கி வென்றது (செ. 16).

## 8. குறிஞ்சிநிலச் செய்திகள்

1. ஆடவர் சிறந்த வீரர்; வில்லையும் கவண்கயிற்றையும் கொள்ளியையும் இரவில் ஏந்தித் தினைப்புனம் காவல் செய்வர்; விலங்குகள் வரும் ஓசை அறிந்து, ஓசை வருந் திசையே கல் விடுவர் (5); தம் மகளிர் கற்புக்கடம் பூண்ட செய்தி யறிந்ததும் முதலிற் கறுத்துப் பின் உடம்படுவர் (3); தாம் விரும்பிய பெண்ணைப் பெறாராயின், ஊர் மன்றத்தில் மடலூர்வர் (22); வேங்கை மரத்தடியில் இருந்து மணம் பேசுவர் (5); கண் ஏணியை அமைத்து ஏறித் தேன் கூடுகளை அழித்துத் தேன் எடுப்பர் (3); புலியை வலைகட்டிப் பிடிப்பர் (29).

* நெடுநல்வாடையுள் மட்டுமே காணப்படுகிறது.

2. இளமகளிர் தெருவில் மணல் வீடு கட்டி ஆடுவர் (15); மரத்தாற் செய்த பாவையையும் பானையையும் கொண்டு விளையாடுவர்; தைந்நீராடும் வழக்குடையர்; நோன்பெடுத்து வீடுதோறும் சென்று ஐயம் ஏற்றும், அதனை இரந்தோர்க்கு ஈந்தும், சிறு சோறு சமைத்து ஆயத்தார்க்கீந்தும் களிப்பர் (23); இளைய முலைமீது தொய்யிற்கொடிபோன் றெழுதிக்கொள்வர் (18); தோளில் கரும்புபோல எழுதிக்கொள்வர் (28); இப்பழக்கமே பிற் காலத்தில் பச்சை குத்திக்கொள்ளும் பழக்கமாக மாறிய தென்னலாம். மகளிர் பொன்னாற்செய்த பலவகைப் பூக்களைச் செய்து கூந்தலில் அணிவர்; மகரவாயாகச் செய்த தலைக்கோலத்தைக் கூந்தலில் வைத்து அணிதலும், பொன்னைக் கூறுபடுத்தின வகிர்களைக் கூந்தலில் வைத்து, இடையிடையே தாழம்பூவின் போழையிட்டு அழகு செய்தலும் உண்டு (19); பிறர்க்குப் பொற்கரகத்திலும் நீர் கொடுத்துதவுவர் (15); பாறையில் உள்ள பள்ளத் தையே உரலாகவும், சந்தன மரத்தாற் செய்த உரலையும் பயன்படுத்துவர்; சந்தனமர உலக்கை, யானைக்கொம்பால் செய்த உலக்கை இவற்றை நெல் குற்றப் பயன்படுத்துவர்; சேம்பின் இலையைச் சுளகாகக் கொள்வர்; தலைவனைப் பாடி நெல் குற்றுவர் (4, 5, 6, 7); மணம் கைகூடின் வரை யுறை தெய்வத்திற்குப் பலியிடுவர் (10); மெய்தொட்டுச் சூள் செய்வர் (27); வரையுறை தெய்வத்தை நினைந்து குரவையாடுவர் (3); ஞாழல் பூவைத் தலையில் சூடிக் கொள்வர் (20).

3. புலி யானையைக் கொல்லும் வன்மை உடையது; யானையின் செவி மறைவில் மறைந்து அதன்மேல் பாயும் (16).

4. யானை புலியோடு போர் செய்யும்; அதன் உருவம் போன்ற பூத்த வேங்கை மரத்தைக் கண்டு பொருது, அதன் தாளில் குத்தி நெரிக்கும் (2); புலியை வென்ற வருத்தத்தோடு செல்கையில் வேங்கை மரத்தைத் தாக்கிச் சினந்தணியும்; கனவில் அப்புலியைக்கண்டு அஞ்சி எழுந்து, புலிபோலப் பூத்திருக்கும் வேங்கை மரத்தை அழித்துச் சினந்தணியும்; பின்னர் அதனைக் காண்கையில் நாணமுற்றுத் தலைதாழ்த்துச் செல்லும் (13); தன்மேற் பாய்ந்த புலியின் மருமத்தில் கோட்டால் குத்தி அதனை வீழ்த்தும் (16); பிடி தன்பால் இருக்கையில் வேறு யானை வருமாயின், அதன் நுதலில் கோட்டாற் குத்தித் தாக்கும் (17); சூல் கொண்ட பிடிக்குக் கரும்பினை ஒடித்து ஊட்டும் (5); யானை, அருவி ஒலியில் தூங்கும் (6).

5. காந்தள்: இதன் முகை இரத்தம்பட்ட யானைக் கொம்புபோல இருக்கும் (17). இது மழைக்காலத்தில் செழித்திருக்கும் (17). பூ மிக்க மணமுடையது (23); காந்தட்குலை அரவுபோன்ற உருவம் உள்ளது (9).

6. வேங்கை: இதன் அடி முழவுபோல இருக்கும் (8); வேங்கை மரம் புலியின் நிறம் போலப் பூக்கும் (2).

இத்தகைய அரிய செய்திகள் மேலும் பலவுள. அறிஞர் மூலங்கொண்டு உணர்ந்து மகிழ்க!

## 9. மக்கள் ஒழுக்கநிலை

1. காதல் கொண்ட கணவரை மணத்தலே குறிஞ்சி நிலப் பெண்கள் இயல்பு; வேறு மணம் பேசலை விரும்பார்; தம் களவைக் குறிப்பால் பெற்றோர்க்கு உணர்த்துவர்; அவர் உடம்படாராயின் தலைவனுடன் போய்விடுவர். தன் தோழியை வேறு ஒருவர்க்கு மணமுடிக்கக் கருதினர்

பெற்றோர் என்பதை உணர்ந்த தோழிப்பெண் ஒருத்தி வருந்திக் கூறல் படித்து உணரத்தக்கது:

i. "இவளைக் குளத்திலிருந்து காத்தவனுக்குக் கொடாது வேறொருவற்குக் கொடுக்க நினைந்தமை அற மன்று. இங்ஙனம் அறம் அல்லாததைச் செய்வதால், இனி இம் மலைநாட்டில் கிழங்கு கீழ்வீழா; தேன் அடைகள் உண்டாகா; தினைகளும் கதிர்விடா.

ii. "குறமகளிர் தத்தம் கணவரைத் தப்பாராய் அவரே தெய்வம் என்று வணங்கி எழுந்திருத்தலாலே அவர்தம் ஐயன்மார் தாமும் வேட்டை தப்பார். (இனி அது தவறும் போலும்!)" (செ. 3)

2. கொடிச்சியர் தம் கை இரண்டும் கூப்பித் தம் குறை தீர முருகனை வணங்கல் மரபு. (செ. 4)

3. தலைவனைத் தலைவி பழித்துக் கூறுங்கால் தோழி தலைவனை உயர்த்திக் கூறலும் (5), தோழி பழித்துரைக்குங் கால் தலைவி தலைவனை உயர்த்துக் கூறலும் (6)—குறமகளிர் பெண் தன்மையை உயர்த்திக் காட்டுகின்றன.

தலைவி, "தலைவன்—அறம்புரி நெஞ்சத்தவன்; தன் மலை நீரினும் சாயல் உடையோன்; நயந்தோர்க்குத் தேரீயும் வண்மையவன்; அஞ்சுவதஞ்சா அறனிலி அல்லன்; அவன் என் நெஞ்சம் பிணித்தவனாவான் (6)" எனத்தலைவனை இயற்பட மொழிதல் இன்பந் தருவதாகும்.

4. காதலன் செய்யுங் கொடுமையைத் தலைவி தோழிக்கும் சேரிக்கும் ஆயத்துக்கும் அறிவியா திருத்தலும் உண்டு. தோழிக்கும் அறிவியாதிருத்தலே வியக் கற்பாலது. (செ. 8)

5. தலைவன் இயல்புகளைத் தோழி தலைவிக்குக் கூறுதல் சுவை தரத்தக்கது: "என்னைக் குறையிரந்து நிற்கும்

தலைவன் அதே சமயம் வலிய உலகத்தைப் பாதுகாப்பவன் போன்ற வலியும் உடையன்; வல்லார் வாய்க்கேட்டு மெய்ப் பொருள்களை அறிந்தவன் போல நன் மக்களைக் கண்டால் தோன்றும் மன அடக்கம் உடையவன்; வறியோர் வறுமையைக் கொடையாற் போக்கும் வலியன்; இத்தகைய பெருங் குணமுடையான் என்னைக் குறையிரத்தலைக் காண்'' (செ. 11).

இங்ஙனமே செ. (14) முதலியவற்றில் தலைவன் சிறப்பியல்புகள் தோழியாலும் தலைவியாலும் பலபடப் பாராட்டப்பட்டுள. இவை இக்குறமகளிர்தம் ஒழுக்க நிலையையும் அறிவு மேம்பாட்டையும் தலைவன் உயர்வையும் அளந்தறிவிப்பன ஆகும்.

6. தலைவி தோழிக்கு அறத்தொடு நின்று இறுதியில், "நான், நம் குடிக்கு வடுவாகாமல் கற்புக் கடம்பூண்ட செய்தியை உரியவர்பால் உரை. நீ உரைப்பின், நிலையற்ற உலகில் நிலை நிற்பதோர் புகழ் நமக்குப் பொருந்தும்'' என்று கூறலை எண்ணிப் பார்மின்! (18) காதல்கொண்ட கணவனை மணத்தலே நிலையற்ற உலகில் நிலை நிற்பதோர் புகழாம்! ஆ! என்னே, குறமகள் நுண்ணறிவும் ஒழுக்கமும்!

7. பொருந்தாக்காம மாகிய பெருந் திணையுள்ளும் தலைவி, "மகளிரை வலிதிற் புணர்தலும் ஒரு மணம் எனத் தலைவன் கூறல் மெய்யாயின்—உலக ஒழுக்கமும் அத் தன்மைத்தாயின்—யான் மறுப்பதால் இவன் நலியுமாயின் — இவன் மனத்தில் 'முற்பிறப்பில் யானும் இவளும் வேறல்லம்' என்பதொன்று தோன்றுமாயின்—நாம் மறுப்பதில் என்ன பயன்?'' எனக் கூறி உடம்படுகிறாள். இப்பெருந் திணைத் தலைவியின் பேரறிவு காணத்தக்கது அன்றோ?

(செ. 26)

8. தோழியும் தலைவியும் உரையாடல்:—

தோழி:—நங்காய், தன்னிடத்துப் பொருகின்ற யானை ஒத்த தன்மை கெட்டு மனமுடைந்து உள்ளே உருகுவான் போல ஒருவன் என்னை நோக்கிப் பலகாலும் வருகிறான்.

தலைவி:—நீ தெருவில் கலங்குவோரைக் கண்டெல்லாம் கவலைப்படல் — காசியில் பிறர் வருத்தம் தம் வருத்தமாகக் கருதும் பெருமக்கள் செயலை ஒத்துள்ளதே!

தோழி:—தலைவன் தன் நோய்க்கு நீயே மருந்து என்கிறான். என் செய்வோம்?

தலைவி:—(நகைத்து) போன் செய்வாம் ...... உலக ஒழுக்கத்தைத் தப்பி ஒருவன் தெருவில் நின்று கூறுங் கூற்றை உண்மை என்று கொண்டு, அதன் உண்மையை உணரேமாய்ப் பேசல் நன்றென்று கூறக் கடவேம்.

தோழி:—நின் கருத்து இதுவாயின், ஒருவன் சாதல் எளிதென்று கூறக்கடவேம்.

தலைவி:—குடிப்பிறந்தார்க்குரிய ஒழுக்கமற்ற நெஞ்சுடையார்க்கு இறத்தலே நன்றென்று கூறு. (செ. 24)

இவ்வுரையாடலில் நகைச்சுவை, தலைவியின் கற்பொழுக்கம், உலக ஒழுக்கத்திற்கு அக்காலத்திலிருந்த மதிப்பு, குடி ஒழுக்கத்தைப் பாதுகாத்தல், பிறர்க்கிரங்கும் தோழியின் உயர்நிலை, இன்ன பிறவும் கண்டு களிக்கலாம். இவைபோன்ற பல அரிய செய்திகளை நூற்கொண்டு உணர்ந்து மகிழ்க.

---

## ௯. பாலைக் கலி

[திருவாட்டி, ஞானம்பாள் அம்மையார், எம்.ஏ.]

எட்டுத்தொகை என்று யாவராலும் நன்கு மதிக்கப் பட்ட தொகை நூல்களுள் கலித்தொகையும் ஒன்றாகும். சங்க நூல்கள் யாவுமே தங்களுக்குத் தாங்களே உவமையா யுள்ள ஒப்பில்லா நூல்கள். அவை யாவற்றிலும், யாவ ராலும் ஒருங்கே புகழப்படும் பெருமையுள்ளது கலித் தொகையாகும். எட்டுத் தொகையென்னும் தொகையுள் எந்த நூலை நாம் படித்தாலும் காண்பது என்னவெனில், உள்ளதை உள்ளவாறு கூறும் புலவரின் உண்மையே. இவ்வகையாக இயற்கையில் காணும் அதிசயங்களை அவைகள் தோன்றுமாறே கூறுவது சாதாரணமாக இயல்வது அன்று. ஒரு விஷயத்தை நாம் ரசித்தவாறு பிறரையும் ரசிக்கச் செய்ய விரும்புவதே நன்று. ஆனால், கண்டதும் காணாததும் விரவிச்சொல்லி, தினையளவு அதிசயத்தைப் பனையளவாகப் பெருக்கி, கணித சாஸ்தி ரத்தின் பல விதிகளையும் அனுசரிப்பதே நாம் இன்னும் கையாளும் ஒரு முறையாகும். நாம் சொல்லவேண்டியது ஒரு வரியாயிருக்கச் சொல்லுவதோ இருபத்தைந்து வரி யாகிறது. இது நமக்குமட்டுமன்று; கீழ்த்தேசத்தார் யாவருக்குமே உரியதொன்றாய்விட்டது. இன்றும், ஒரு வார்த்தைக்குமேல் மறு வார்த்தை பேச அவகாசமில்லாத 20-ஆம் நூற்றாண்டிலும், சீனதேசத்தவர், தமது விரிவான மொழிநடைக்குப் பெயர் பெற்றுள்ளனர். சீனன் ஒருவ னுக்கு "வாரும்" என்று சொன்னால் திருப்தியிருக்காது. தலை தரையைத் தொடுமாறு குனிந்து 'உங்கள் பொற்பாத கமலங்கள் தரையில் நடப்பதால் நீங்கள் மெலிந்து வாடி நடந்து புழுவினும் கடையேனான எனது குடிலின் படியை

மிதிக்க நான் என்ன தவம் செய்தேனோ; இது நான்செய்த தவமன்று; என் முன்னோர் செய்த புண்ணியமே' என்று உபசரித்தாற்றான் முடியும். இந்த வெறும் டாம்பீக உபசரணைக் கவிகள் கீழ்நாடுகளில் மட்டுமன்று; மேல்நாடு களிலும் அநேக நூற்றாண்டுகள்வரை காணப்பட்டது. உதாரணமாக ஆங்கிலப் புலவரான ஸ்பென்ஸரை (Spencer) எடுத்துக்கொண்டால் அவர் சொல்லவேண்டிய கருத்தை வளைத்து வளைத்து மிளைடார்சுருங்கைப் போலத் தான் கூறுவர்.

ஆனால், உலகில், இலக்கிய உலகில் அநேக பிரளயங் கள் உண்டு. அவற்றின் ஒன்று மூலமாக இங்கிலாந்தில் இயற்கையை இயற்கையாகவே கூறும் புலவர்கள் தோன்றி னர். காளான் போல ஒருவரை யொருவர் தொடர்ந்த னர். இவர்களுள் முதன்மை பெற்றவர் வாட்ஸ்வர்த் (Wordsworth) என்னும் புலவராகும். எளிமையும், இனிமையும், மனோதத்துவமும் ததும்பும் பாக்களை எழுது வதே அவர் சீவமந்திரம். அவர் கண்டதே இயற்கைத் தெய்வம் ஒன்றுதான். ஆனால் அஃது இங்கிலாந்தில் பத்தொன்பதாம் நூற்றாண்டில் போற்றப்பட்டது. நமது நல்வினை இன்னும் சிறந்தது. ஆனால், மற்றைய இலக்கி யங்கள் கீழிருந்து மேனோக்கிச் செல்லும் முறையைப் பின்பற்றின; நாம் மேலிருந்து கீழே செல்லும் வழியை யறிந்துள்ளோம். நமக்குக் கிடைத்த மிகப் பழைய நூல் களில் சுமார் நானூறு வாட்ஸ்வர்த்துக்களைக் காணலாம். ஏனெனில், எந்தச் சமூகத்திற்காக நூல்களைச் செய்தார் களோ, அந்தச் சமூகமே அவ்வாறானது. சிறு குழந்தை யிடம் ஒரு பெரிய வேதாளத்தின் கதையைச் சொன்னால் அது மகிழ்ந்து கைகொட்டும்; கதை கேட்கச் சமயமில் லாத ஓர் அறிவாளியிடம் சொல்லுவதால் பயனென்ன?

'இவன் வேலையற்ற திண்ணை தூங்கித் தடிராமன்' என்று நினைப்பான். அதுபோலவே நாகரிகத்தில் முதிர்ந்த சமூகம் கட்டுக்கதைகளை விரும்பாது. அது விரும்பவுமில்லையென்பது நமக்குக் கிடைத்துள்ள சிற்சில அரிய நூல்களாலேயே அறியக்கிடக்கின்றது.

இங்ஙனம் நாகரிகத்தின் தலைமையில் நின்றதொரு சமூகத்தாரால் விரும்பிப் போற்றப்பட்டவை சங்க நூல்கள். அவற்றினுள்ளும் "கற்றறிந்தார் போற்றுங் கலி" யென்னும் சிறப்பை யெய்தியது கலித்தோகை. இவ்வாறு சிறப்பெய்திய கலித்தொகை நமது தமிழுக்கே யுரித்தாய ஒரு பொருளைப்பற்றியது. அஃதாவது 'அகப்பொருள்' என்பதே. மனிதன், தான் ஒரு பொருளைப்பற்றி நினைக்கத் தொடங்கின நாள்முதல், இந்த இன்பம் என்பதைப்பற்றி நினையாத நாடில்லை, மொழியில்லை; இலக்கியமில்லை. ஆயினும் ஒன்றுவது தமிழ்மொழி அதைப்பற்றி நினைத்ததைப் போல் நினைக்கவுமில்லை. அது வரையறை கண்டதைப் போல் கண்டதுமில்லை. நமது தமிழில் இவ்வின்பத்தைக் குறித்து வகுத்துள்ள வகைகள் சிறந்தவை; நாகரிகமானவை; பொருட் சிறப்புடையவை. அவ் இன்பமென்னும் பொருளைப்பற்றி மனிதத் தன்மைக்குள்ள எளிமையையும், மென்மையையும் ஒருசேர உணர்ந்து மென்மை (delicacy) சிறிதும் கெடாதவாறு வகுத்தது மக்களுக்கு ஏற்ற தொன்றுகும் என்று மனோதத்துவம் நன்கறிந்த வல்லுநர்களாற் கையாளப்பட்டது. நாம் அறிந்ததும், அறியாததும், அறிந்தும் அறியாததுமான சில உண்மைகளை யறிவிப்பதன்றோ உண்மைப் புலவரின் தொழில். இதனாலன்றோ கவிகளை "உலகின் பறைகள்" என்று அழைத்துள்ளனர்.

நம்முடைய புலவர்கள். அகப்பொருளை ஐவகையாக வகுத்துக் கொடுத்தனர். ஐம்பெரும் உண்மைகளை யளித்தனர். தொடக்கத்தில் ஆண், பெண் என்ற வகுப்பினருள் காணும் ஒரு கவர்ச்சி. இஃது ஒருபுடை யென்று சொல்ல வியலாது. மனிதனுக்கே யுரியதென்றும் சொல்ல முடியாது. படைப்பில் மிகக் கீழதாய ஒரு புழுவிலும், நகர்வற்ற தாவரங்களிலுங்கூட இதைக் காணலாம். படைப்பின் அறிவு முதிர முதிர, தனக்கு ஏற்றதொன்றைத் தானே தேர்ந்தெடுக்கும் தேர்ச்சி யறிவும் முதிர்கின்றது. இதுதான் குறிஞ்சித்திணையில் நான் காணும் பெரிய தத்துவம். தலைவனும் தலைவியும் பல்லோருள்ளும் ஒருவரை யொருவர் கண்டு தமக்குரியர் என்பதை யறிந்து, மனநிலையைப் பரிவர்த்தனை செய்து அளவளாவுதலே அது. அதன்பின்பு ஒருவரோடு ஒருவர் மனமொத்துத் தமது வாழ்நாளாகிய வங்கத்தை நடாத்துதல். இதுவே முல்லைத்திணையின் உண்மை. வங்கத்தை நடத்துவோருள் ஒருவன் குணதிசையிலும், மற்றவன் வடதிசையிலும் துடுப்பை இழுத்தால் வங்கம் செல்லுங் கதி யென்ன? திரைகளுக் கிரையாகுவதே. அதுபோல் மனை வாழ்க்கை யென்னும் வங்கமும்—அன்று, சிறு கட்டுமரம், இடம் சிறிது விட்டாலும் கவிழ்ந்துவிடும். ஆனால் இருவரும் சமமான அன்பும் திண்மையும் உடையவரில்லையாயின் வங்கம் இயங்காது. சமமான அன்பில்லையாயின் மற்றவரது நன்மையைக் கோர முடியாது. நன்மையைக் கோர இயலவில்லையாயின் அன்பிற்கேயுரிய சிறு பணிகளை இயற்ற ஏதுவில்லை. இம்மாதிரி இரண்டறக் கலந்த ஒற்றுமை யிருந்தாலும் சிறு சிறு வேற்றுமைகள் தோன்றினாற்றான் அன்பின் திண்மை அதிகப்படும். எப்பொழுதும் ஒருவர் நேசிப்பவரும், ஒருவர் நேசருமானால் வாழ்க்கை

ருசியற்றுவிடும். சிறுசிறு பள்ளங்களில் ஓடை குதித்துச் சென்றால்மட்டுமே ஓசையும் பிறக்கும், செவிகளையும் கண்களையும் ஒருங்கே கவரும். இதுவே மருதம். பிறகு நெய்தல்: அன்பிற்காக இரங்குவது இது: இவை நான்கிற்கும் நடுவணதாக உள்ளதே என் உள்ளத்தைக் கவருவது. அஃதாவது பாலை. இது முழுவதும் துன்பமன்று. பிரிவாரோ என்று அஞ்சுவது பெரும்பாலும். அஞ்சும்பொழுது அன்பின் நொய்மை நன்கு புலப்படும். பிரிந்து சென்றவன் தான் விட்டுவந்த மனைவியைக்குறித்து வருந்துவது; நடுவில் ஐயோ இவ்வளவு கொடுமையான வழியில் சென்றேனே என்று வழியைக் குறித்து வருந்துவது; எந்தப் புலவனும் துன்பத்தைப்பற்றிச் சொல்லும் போதுதான், தான் மனித தத்துவத்தை யறிந்துள்ள முறையை நன்குணர்த்த முடியும். ஆங்கில நாடகக் கவியான ஷேக்ஸ்பியர் என்பவரின் நாடகங்களில் சில 'Tragic—Comedies' என்பவை சிறந்துள்ளவை. அவற்றின் சிறப்பு, அவை இன்பமும் துன்பமும் விரவி வருவதாலேதான். அதுபோலவே தமிழிலும் பாலைத்திணை சிறந்தது. ஆதலால், கலித்தொகை என்னும் தொகையுள் பாலைத்திணையை முற்கூறியதில் அதிசயமொன்றுமில்லை.

கலித்தொகையில் பாலை யென்னும் பகுதியைப் பாடியவர் சேரமான் பாலை பாடிய பெருங்கடுங்கோ என்பவராவர். இவர் எட்டுத் தொகையுள் பாடியுள்ள பாலைத் திணைக்குரிய பாக்கள்யாவும் மிகச்சிறந்தவை. பிறர் கூறாத, காணாத சில உவமைகளை வெகு அழகாகக் கூறுபவர். எல்லாப் புலவர்களும் சொல்வது ஒரு பொருள்தான்; அஃதாவது: வறணுற்ற பாலையிடம்; மரம் வெம்பியது; உண்ண நீரற்றது; மக்கள் செல்ல வியலாதது; ஆயினும், இந்த ஒன்றையே பலபேர் பலவாறு கண்டுள்ளார்கள்.

கண்டதை வெகு நேர்த்தியாகக் கூறியுள்ளனர். அவற்றுள் பெருங்கடுங்கோ கண்டது வெகு அழகு வாய்ந்த சித்திரம்.

காட்டின் கடுமையைக் கூறவேண்டும், வறிதாக வெம்மையால் உயங்கிய களிற்றையும், வாடிய தளிரையும் கூறினால் அதற்கு இளகாத சில கன்மனங்களும் உண்டு. யானையும், புரவியும், கொடியும் போகவேண்டுமென்று புறப்பட்டாலும், நினைத்தாலும் அவற்றிற்குரிய இடம் எது? காடுதானே. ஆயினும் புலவர் அவ்வளவு இலேசாகப் போகவிடவில்லை. கானம் மாரிவறப்ப, மரம் வெம்ப, மரையா மரல் கவர நின்றது. இருபுறங்களிலும் மலைகள் ஓங்கி வளர்ந்துள்ளன. இவையெல்லாவற்றிற்கும் மேலாக நடுவிகந்தொரீஇ நயனில்லான் வினைவாங்கக் கொடிதோர்த்த மன்னவன் கோல்போல ஞாயிறு தெறுதல் செய்த சுரத்திடைக் காண்பதொன்றுண்டு. யாதெனில், கொள்ளும் பொருளிலராயினும் கானவரது பகழி உடலில் மூழ்கியோர், சுருங்கி, உண்ண நீரற்று, புலர்ந்து வாடும் நாவினைத் தமது கண்ணீரைக் கொண்டு நனைக்கின்றனர்.

மரையா மரல்கவர மாரி வறப்ப
வரையோங் கருஞ்சுரத் தாரிடைச் செல்வோர்
சுரையம்பு மூழ்கச் சுருங்கிப் புரையோர்தம்
உண்ணீர் வறப்பப் புலர்வாடு நாவிற்குத்
தண்ணீர் பெறூஅத் தடுமாற் றருந்துயரம்
கண்ணீர் நனைக்குங் கடுமைய காடு.

—பாலைக்கலி-5

இதைப்போற் பாலையைச் சித்திரித்துள்ள இடங்கள் அநேகம் உள. இப்படிச் சிறு சிறு சந்தர்ப்பங்கள் மூலமாக, மனிதத்தத்துவத்தை அறிந்து கூறியிருப்பதே அவர் சிறப்பிற்குக் காரணம்.

பாலையின் முதற் பாட்டில் ஓர் உண்மையை வெகு அழகாக எடுத்துக் காட்டியுள்ளார். அஃதாவது; தலைவன் பொருளின்றி வாழ்வது வாழ்க்கையன்று. "அறன் கடைப்படா வாழ்க்கையும், என்றும் பிறன் கடைச்செலா அச் செல்வமும் இரண்டும் பொருளின் ஆகும்" என்பதை யுணர்ந்து தனது தலைமை பொருந்திய அழகினையுடைய மனைவியைப் பிரிந்து செல்லவும் துணிந்தான். இவன் கருத்தை யறிந்த தோழி அவனிடம் சென்று பலவகை யிலும் இடித்தும், நயத்தாற் கூறியுமாயிற்று. அவனோ சிறிதும் உறுதியினின்று மாறுவதாகத் தெரியவில்லை. உடனே அவள், 'மறப்பருங் காதலுடைய இவள் இங்கே புன்கண்கொண் டினையவும் நீர் செல்வதென்றால் அது ஒரே ஒரு சமயத்திற்றான் முடியும். அஃதாவது: நீர் அன் பற்றிருந்தால்;' என்றவுடன், அவன் உறுதி பறந்தோடி யது; செலவைத் தவிர்த்தான். ஆனால் ஆசிரியர், தலைவியது சிறப்புற்ற அழகு தொலையுமென் றஞ்சித் தவிர்த்தான் என்று கூறுகிறார். நான் கூறுவது என்னவென்றால் 'அன்பன்று' என்று கூறவும் தவிர்த்தான் என்பதே. இம்மை, மறுமை களுக்குரிய அன்பேயானால், அவள் தொல்கவின் தொலை தற்காக அஞ்சி அறனைக் கைவிடான். ஏனெனில், அவன் காதலிப்பது. அவளையன்றி, அவள் கவினையன்று. இவ் வன்பு தனக்கில்லையெனில் அதுவே அவன் திண்மையைக் குலைத்தது. இதையறிந்துதான் ஆசிரியர் முடிவாக அவன் தீர்மானத்தை உரைக்குமுன், மிக வன்மை உரையான 'அன்பன்று என்று யான் கூறவும்' எனக் கூறியிருத்தல் வேண்டும்.

தலைவனது அன்பின் மிகுதிக்கு எவ்வாறு இது சான்றாக உள்ளதோ, அதுவேபோல் மற்றொரு பாட்டுத் தலைவியது அன்பின் திண்மைக்குக் கரியாக உள்ளது.

தலைவன் பிரிந்து செல்லச் சூழ்கின்றான் என்பதை யறிந்த தலைமகள் அவனிடம் சென்று, 'நீ சூழ்வது அன்பற்ற காரியமாயினும் அதற்கு நீ என்ன பதிலளிப்பாய் என்பதை யானறிவேன். உன் விடையே நீ என் அன்பின் நிலையை அறியவில்லை என்பதை உறுதிப்படுத்தும். உன்னைப்பிரிந்து, வேறு- இன்பங்களிடையே இருப்பது எனக்கு இன்பமென்றெண்ணினையே; அதுவே அன்பற்ற தொன்று. எவ்வாறெனில், நீயும் நானும் அன்பினால் ஒன்றென்பதை மறந்தாய். ஆனால் நீ மறந்துவிட்டாலும் நான் அதை நினைவுறுத்துகின்றேன்.'

> " நும்மொடு துன்பந் துணையாக நாடின் அதுவல்லது
> இன்பமு முண்டோ வெமக்கு "

புலவன் சிறந்த புலவனானால் அவன் தீட்டும் சித்திரத்திற்கு அதிசயமான பொருள்கள் அவசியமில்லை. பெரும் அரக்கர்கள் வேண்டாம், விக்ரமாதித்தியனது வேதாளம் வேண்டாம். என்றும் எங்கும் காணப்படும் வாழ்க்கையின் சித்திரங்களே போதுமானவை. நம்மைப்பற்றிக் கூறுவதுதான் நமக்கு என்றும் அரு விருப்பத்தை யளிக்கும். இவ்வாறு வாழ்க்கையில் காணும் சித்திரங்களைக் கூறுவதில் நம் புலவர்களை மிஞ்சியவர் யாருமில்லை. ஒரு சிறு செய்தி. தலைவன் பொருளாசையாற் பிரிய எண்ணினான். நான் கூறப்போகும் பாட்டு தோழியின் கூற்றாகவுள்ளது. யார் கூற்றாயினும் நமக்கு வேண்டியது புலவர் காட்ட விரும்பும் சித்திரமே. அவன் தன்னை ஏமாற்றியதைப்பற்றி அவளுக்குக் கோபம் பொங்கி எழுகிறது. உதடுகள் துடிக்கின்றன. கயமலருண்கண் நீர் நிரம்பியுள்ளது. உலைவாயினின்றெழு வலைப்போன்ற வார்த்தைகள், பகழியைப்போல் தொடர்கின்றன. 'நீ முன்பு நல்ல இனிய மொழிகள் கூறியவையெல்லாம் பொய்யென்று நான் எவ்வாறு அறிவேன்?

பொய்கூறி என்னை வஞ்சித்ததுமல்லாமல், அலரும்கொடுத்துச் சுரத்திடைச் செல்லத் துணிந்ததை யானறிவேன். நீ இனி மகனல்லன்;' "மகனல்லை" என்று கூறியது பெண்களின் தன்மையை விளக்குவதொன்றாகும். எந்த மகளும் ஒருவனை விரும்புவது மகனும் தன்மையைப் பற்றியே, அவனுள் இருக்கும் மகன் என்பதே அவளைக் கவருவது. அவனிடம் இருந்து அது நீங்கிய படியாற்றான் அவன் அங்ஙனம் கொடியவனானான் என்பதைக் கூறவே, "மகனல்லை" யென்றது. வேறொரு வசை மொழியும் ஏற்றதாய் ஊடுருவிச் செல்லாத விடத்துத்தான் ஒரு பெண் நீ மகனல்லை யென்று சொல்லத் துணிவாள். ஆயினும் உடனே மனம் இளகிவிடுகிறது. அதைக் காட்டவும் மனமில்லை. 'ஆகவே நீ செல்லலாம். சென்றவிடத்து இந்த ஊரிலிருந்து வரும் ஒருவரையும் எம்மைப்பற்றி வினவவேண்டாம். வினவினால், உன் வேலைக்கு முட்டுப்பாடு உண்டாக்கும் சில செய்திகளை நீ கேட்கவேண்டிவரும். அப்பொழுதும் நீ வருந்துவாய் என்று சொல்லல் ஆகாதாம்.' சொன்னால் தனது அன்பையும், நெகிழ்வையும் அவன் அறிந்துவிடுவான். இது நாமின்றும் காணுவதொன்று. நாம் சொல்வது நமது அன்புடையாரை ஊடுருவிப் பாயும் என்பதை யறிந்தும், அறியாததுபோல் ஏதோ பழமை கூறுவது போலக் கூறுவது. இங்ஙனம் தினசரி காணப்படும் அழகிய நாடகமொன்றை வெகு அழகாக, நாகரிகமான ஓர் எளிய, சிறு கலிப்பாவினுள் அமைத்தளிப்பது பெருங்கடுங்கோ முதலிய வல்லுநர்களாலேதானாகும்.

நமது மொழியில், நாடோறும் நடக்கும் உண்மைகளை உவமை வாயிலாக வழங்குவது, வேறு மொழிகளில் காண்பதரிது. நமக்கு, கீழ் நாட்டாருக்கு, வேதாந்தமும் இன்ப

மும் ஒன்றின் ஒன்று கூறுபாடாகும். இரண்டையும் ஒரு பெரிய இட்டிகைச் சுவரால் பிரித்துத் தனித்தனியாகச் சிறையிடுவது கிடையாது. இல்லையாயின் பாலையைப்பற்றிக் கூறும் பகுதியுள் தலைவன் தலைவியர்களின் மனநிலையைப் பற்றிக் கூறும்போது, உலகில் காணப்படும் சிறு பழுதுகளை, உண்மைகளைக், கூற அவசியமேது? நம் நாட்டவர்கள் இவை இரண்டையும் வேறு வேறாகக் கருதுவதில்லை. தொன்று தொட்டு அவை கைகோத்துக்கொண்டே இலக்கிய வழியில் நடந்துள்ளன. இதற்கு உதாரணமாகப் பாலைக்கலியில் அநேகம் மலிந்துகிடக்கின்றன. ஆனால் புலவர் சிலர் தாம் கூறவந்ததை மறந்து, இவ்வுண்மைகளையே பெருக்கிப் படிப்போரது மனம் மகிழாமல் செய்கின்றனர். ஆனால் பாலை பாடியவர் இக்குற்றத்திற்கு ஆளாகவில்லை. அவர் இடங் காலம் அறிந்தே கூறியுள்ளார்.

"உண்கடன் வழிமொழிந் திரக்குங்கால் முகனும் தாங்
கொண்டது கொடுக்குங்கால் முகனும்வே றுகுதல்
பண்டுமிவ் வுலகத் தியற்கை யஃதின்றும்
புதுவதன்றே" —பாலை, 22.

என்ற சிறு உண்மையைக் கூறுமிடம் அதற்கேற்றதே. தலைவன் தலைமகளாற் பெற்ற நன்மைகளையெல்லாம் மறந்து பிரிந்து செல்ல நினைத்துள்ளான். அச்சமயத்தில் உனக்கு மட்டும் இது புதிதன்று; மனிதன் என்னும் வகுப்பிற்கே யுரியதொன்று. வாங்கும்போது பல்லைக்காட்டி வாங்குவதும், கொடுக்கும்பொழுது முகஞ் சுளிப்பதுவும் என்றும் எங்குங் காணப்படும் என்று கூறுவது அசந்தர்ப்பமாகாது. இவ்வகை உதாரணங்கள் அநேகமுள.

வெம்மையுடைய சுரத்தைக் கூறவேண்டும். சாதாரணமாகச் சினையற்றவைகளாய், சேர்ந்தார்க்கு நிழலின்றி,

வேரொடு வெம்பிய மரங்கள் நிறைந்ததாய், நினைத்தாலும் சுடும் சுரம் என்று கூறினாலும் போதும். எங்கு சிறு துளை கண்டாலும் அதில் பெரியதொரு களிற்றை நுழைப்பது தானே கவியின் களிப்பு. அதுபோலவே இவரும் "வறியவ னிளமைபோல் வாடிய சினையவாய்" என்றார். இவ்வகை யால் ஓர் அரிய விஷயத்தை நிரூபிக்கின்றார். இளமை செல்வமிருந்தால் மட்டுமே அனுபவிக்க முடியும். பல சம யங்களில் வறியவனுக்கு இளமை ஒரு முட்டுப்பாடேயாகும். இளமையின் ஆவல்களையும், தொல்லைகளையும் வறுமை எவ் வாறு தாங்கும்? ஆதலால் வறியவனுக்கு இளமையாற் பய னென்று மில்லை யென்பதை வெகு நாகரிகமாகச் சினைகளைக் கூறும் முகமாகக் கூறிவிட்டார். தொடர்ச்சியாகக் கூறி வரும் உவமைகளில் மூன்றாவதாகக் கூறுவதை நாம் ஊன்றி விசாரிக்க வேண்டும். மரம் ஒரு சிறு பச்சையு மில்லாமல் வெம்பி விட்டது. அதன் அழிவு எவ்வாறு இருந்ததென்றால், "யார்கண்ணு மிகந்துசெய்து இசை கெட்டா னிறுதிபோல்." இதைக் காட்டிலும் உயர்ந்த படி யாகச் சொல்லவே முடியாது. சிறிது துன்பம் செய்து கெட்டவனுக்கு ஒரு சிறிது விமோசனமாவது உண்டு. ஆனால் இவனுக்கோ ஒரு வழியுமில்லை. அவனிறுதி முற் றுப் புள்ளியே. அநேகர் இதற்கு உதாரணமாக இருந்து சென்றனர். உரோம் மன்னர்மன்னனான நீரோ கொடுங் கோலின் உயிர்நிலை போன்றவன். தனக்காக அரும்பாடு பட்டுத் தன் கணவனையும் நஞ்சிட்டுக் கொன்ற ஈன்றாளை அதே நஞ்சிட்டுக் கொன்றான். கொஞ்சும் கிளிபோல் கெஞ்சிய மனைவியைச் சொல்லொணா விதமாக அல்லலுறச் செய்தான். பார்ப்பதற்கும், தீட்டுவதற்குமரிய மாட மாளிகைகளுடன் கூடிய ரோம் நகரைத் தீக்கிரையாக்கி னான். எதற்காக? அது, எரியும் தோற்றத்தைத் தான்

காணும்போது தன் மனதிலெழும் உணர்ச்சிகளை, அப்படியே தனது இசைக்கருவியில் இட்டு வாசிப்பதற்கே; இவன் இறுதிதா னென்ன? தன் கையால், தனது கொலையஞ்சா வினைவரால் பலருக்கும் அமுதாக அளிக்கப்பட்ட அதே நஞ்சு, இவனுக்கும் இவன் வினைவராலேயே கொடுக்கப்பட்டது. இவ்வகை இறுதிகளை எண்ணித்தான் பெருங்கடுங்கோ "யார்கண்ணு மிகந்துசெய் திசைகெட்டா னிறுதி" என்று கூறினார்போலும்.

பாலைக் கலியின் சுவை ஒருபுடையது அன்று. முப்பத்தைந்து பாக்களும் மனித தத்துவ மறிந்த ஒரு தத்துவ ஞானியின் சுடர்களாக விளங்குவதுபோலவே, மிருகங்களையும் அவற்றின் குணவிசேடங்களையும் அறிந்தவொருவரின் ஞானப்பால்களுமாகும். மதங்கொண்டு செறித்தோடும் யானை கோலால் நிறுத்த வொண்ணுதது. எங்கோ ஒரு யாழின் குரல் கேட்கின்றது. யானையின் வெறி நோக்குத் தாழ ஆரம்பித்தது. ஒரு நிலையில் நின்றது. ஓசைகள், இசையோடு கூடிய ஓசைகள், மிருகங்களைக் கவருவது பிராணி சாத்திரம் அறிந்ததோர் உண்மை. அநேக இடங்களில் மிருகங்களும் மனிதர்களைப் பல விதங்களிலும் ஒத்திருப்பதைக் காட்டியுள்ளார். சுரமோ வறனுற்றது. உண்ண நீரில்லை. ஒரு சிறு குழியின் அடியிற் சிறிது வண்டல் நீர் உள்ளது. கண்ட களிற்றிற்கு அதைத் தானுண்ண மனம் எழவில்லை. தனது கன்றுக்கு ஊட்டிற்று. அது சிறிதும் ஈன்றோரின் வருத்தத்தை நினையாது கலக்கியது. கலக்கிய சின்னீரைப் பிடியை யுண்பித்துப் பின்னர்த் தானுண்டது களிறு, இத்தன்மை இன்றும் அநேக மிருகங்களில் காணலாம். மீன்களுள் ஒருவகைப் போத்து, தனது பெடையிட்ட முட்டைகளைத் தன் வாயிலேயே தாங்கிக்கொண்டு, அது பொரிக்குமளவும் உணவு கொள்வ

தில்லையாம். ஆகையால் "துடியடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப், பிடியூட்டிப் பின்னுண்ணுங் களி"' றென்றதில் நம்பத்தகாதது ஒன்றுமில்லை.

பாலைக்கலி தமிழ்ப் பெண்களுக்குச் சிறந்ததோர் நிதியாகும். எவ்வாறெனில், பெண் என்பதற்கே அழகு செய்யும் சில குண விசேடங்களைக் கூறியிருப்பதால்; முதலில் நான் சொல்ல விரும்புவது யாதெனில் எங் நாட்டிலும் சாதாரணமாகப் பெண்களுள் காணப்படுவது: பெண்கள் தங்கள் தோல்வியைத் தங்களது என்று ஒப்ப இயலுவதில்லை. தலைவிக்குத் தான் வருந்துவதைத் தோழி அறிந்ததுகுறித்து நாணம் மேலெழுந்தது. அவளை நோக்கி, 'நான் வருந்தேன்; ஆனால் என்னை வருத்துமாறு செய்பவை பலவுள.' "வையைவா ரவி றலிடைப் பொழுதாயின், விரிந்தானா மலராயின், சுரும்பார்க்கும் சினையாயின், பிரிந்துள்ளார் அவராயின் வருந்தாமல் என் செய்வது?" இதிலுள்ள எளிமைத் தன்மையே மனத்தைக் கவருவது. இவ்வெளிமை தானே பெண்களின் அணியாயது. இதைப்போலவே மற்றொன்றுளது. வரும் துன்பத்தை வராது என்று நினைத்து ஆறுதல் கொள்வது. இதையறியாமலா, "துறக்குநரல்லர், நடுங்குதல் காண்மார் நகைகுறித்தனரே" என்று கூறியது.

பெருங்கடுங்கோ உயிரற்ற பொருள்களைச் சித்திரிப்பதற்கு, உயிருள்ள, நமக்கு மிகவும் அணிமையிலுள்ள பொருள்களின் வாயிலாகவே கூறுகின்றார். இவ்வாறு அவர் கூறுவதிற் பயனென்னவெனில், தாம் தீட்டுஞ் சித்திரத்தைத் தெளிவாக நம்மைக் காணச் செய்வதுதான். மனம் ஒரு புகைப்படக் கண்ணாடியேயாம். வெளியிலிருந்து வரும் சித்திரங்கள் மேன்மேலும் பதிவு செய்யப் பெற்று ஓர் ஆழ்ந்த பதிவு ஏற்படுகிறது. ஆதலால், முன்

னரே நமது மனம் அறிந்த ஒன்றை யாராவது காட்டினாலும், குறித்துச் சொன்னாலும் உடனே நம்மால் பழைய பதிவின் மேலே பதிவுசெய்ய இலேசாக இயலும். ஆற்றைப்பற்றிக் கூறும்பொழுது தலைமயிர் அலங்கரித்துள்ளதற்கு ஒப்பிட்டு, "எஃகிடை தொட்ட கார்க்கவின் பெற்ற ஐவகை போல்" என்றார்.

பாலைக்கலியைப்பற்றி முடிக்குமுன் நான் நச்சினார்க்கினியர் நமக்குச் செய்துள்ள பேருபகாரத்தைச் சொல்லாமல் முடிக்க முடியாது. பாலைக்கலி - 11. பாட்டின் பொருட் சிறப்பு முழுமையும் உரையாசிரியரின் வேலைப்பாடே யாகும். ஆசிரியர் கூறியது, "சிறு நனி நீ துஞ்சியேற்பினு மஞ்சும்" என்பதே. அதற்கு உரையாசிரியர் கூறியது யாதெனில், 'அஞ்சுமென்றது, பிரியுமாறு நினைந்து முன்னர்த் துயிலின்றிப் பின்னர்த் தாழ்க்கத் துயின்றானென்று அஞ்சினளென்க.' என்றார். இதற்கு இவ்வுரை கூறியவர்க்கு நாம் எவ்வாறு நன்றி செலுத்த முடியும். இவளை விட்டுப் பிரிய வேண்டுமேயென்ற கவலையால் முன்பு துயில்கொள்ளவில்லை. தாழ்த்துத் துயில் கண்டதால், தாழ்க்கத் துயின்றான். இவ்வாறு தாழ்க்கத் துயிலுவதற்குமுன்னர்த் துயிலின்றியிருந்திருத்தல் வேண்டும். ஏன் துயில் கொள்ளவில்லை? தன்னை விட்டுப் பிரிவதையெண்ணித்தானென்று அஞ்சினள். நச்சினார்க்கினியரான உரையாசிரியர் பெருங்கடுங்கோ ஆற்றிய தொண்டினும் சிறந்தவொன்றை ஆற்றியுள்ளார். மாசு படிந்த மணியைத் துலக்கித் தந்தார்.

---

# ரு. மருதக் கலி

[வித்துவான், மு. வரதராசனுர், B.O.L.]

தமிழன்பர்களே!

மக்கள் வாழ்க்கையை ஆராய்ந்து தெளிந்து அகம் புறம் என்று இருவகைப்படுத்தினர் பண்டைத் தமிழ்ச் சான்ரேர்; வாழ்க்கைக்கு இன்றியமையாத காதலொழுக்கத்தை அகத்திணை என்னும் பெயரான் வழங்கினர்; காதலர் தம்முள் ஊடுதலாகிய ஒழுக்கத்தினையும் அகத்திணையின்பாற்படுத்தினர்; அதனை மருதத்திணை என்றனர்.

மருதத்திணைபற்றிப் பாடிய புலவர்களும் பலர்; அவர் தம் பாட்டுக்களும் பலவே. ஆயினும், மருதத்திணை பற்றிப் பாடுதலால் சிறப்புற்ற பெயருடையோர் இருவர்; ஒருவர் மருதம் பாடிய இளங்கடுங்கோ: மற்ருெருவர் மருதனிள நாகனுர். இவருள், மருதனிளநாகனுர் பாடிய கலிப்பாக்களின் தொகுதியே மருதக்கலி என்பர் சிலர். ஆயினும், மருதக்கலியுள் அடங்கிய முப்பத்தைந்து பாடல்களும் சொல்லாலும் பொருளாலுந் தம்முள் ஒற்றுமையுந் தொடர்பும் உடையன அல்ல; ஆதலால், புலவர் பலர் பாடிய பாக்களின் தொகை எனலே ஏற்புடைத்தாகும்.

## 1. மருதத்திணை

மருதக்கலியுள் கூறப்படுவது என்னை? தலைவனுந் தலைவியும் ஒரு பொழிலின்கண் எதிர்ப்படுகின்றனர். அவர்க்குள் உள்ளக் கவர்ச்சி ஏற்படுகின்றது. அவர் அன்பு அறிவு ஒழுக்கம் முதலியவற்ருல் ஒற்றுமையுடையவர் ஆதலின் "செம்புலப் பெய்ந்நீர் போல" நெஞ்சங் கலக்கின்றனர். இங்ஙனம் நிகழ்கின்றது இயற்கைப் புணர்ச்சி. பின்னர், இருவரும் பலமுறை எதிர்ப்படுகின்றனர்; பல இடையூறுகளையும் வென்று வரைந்துகொள்கின்றனர்; தாங் கற்றகளவை மறக்கின்றனர்; இல்வாழ்க்கை நடத்துகின்றனர்.

தலைவியுந் தலைவனுந் தாய்தந்தை யாகின்றனர். இருவர் தம் நெஞ்சையும் அள்ளிக்கொள்ளும் அழகிய குழந்தை பிறக்கின்றது. இல்வாழ்வு இனிய வாழ்வாக விளங்குகின்றது.

இரண்டு தலையாம், ஒருடலாம் ஒரு பறவைக்கு; அது போன்று, தலைவன் தலைவி இருவர்க்கும் உடல் இரண்டாயினும் உணர்வு ஒன்றே. அவ்வாறு வாழ்ந்துவரலாயினர் இந்நாள் வரைக்கும். குழந்தை பிறந்த பின்னர், இவர் வாழ்வில் வேறுபாடு தோன்றுகின்றது. மகவின்பால் மனஞ் செல்கின்றது. தலைவியுங் குழந்தையிடம் அன்பு செலுத்துகின்றாள்; தலைவனும் அன்பு செலுத்துகின்றான். தலைவி செலுத்தும் அன்பு சிறந்தது; நிலையானது. தலைவன் அன்போ அத்தகையது அன்று. எனவே, அவன் ஒழுக்கத்தில் மாறுதல் நிகழ்கின்றது. தலைவன் தலைவியைப் பிரிகின்றான்; பரத்தையரை நாடுகின்றான். அப்பரத்தையர் அவன் அன்பைப் பெறுகின்றனர். ஆனால், அவரிடம் அவன் செலுத்தும் அன்பும் நிலையானது அன்று.

எனவே, அவன் நெஞ்சம் மீண்டுந் தலைவியை நாடுகின்றது. அவனுடைய புறத்தொழுக்கம் (பரத்தையரோடு மகிழ்தல்) தலைவிக்குத் தெரிந்துவிடுகின்றது. அவள் தன் காதலன் தவறி நடத்தலை நினைந்து நினைந்து வருந்துகின்றாள்; அவனைக் குறித்து அயலார் பேசுவதை அறிந்து அறிந்து துன்புறுகின்றாள்; அவன் தன்னைக் கைவிட்ட தன்மையை எண்ணி எண்ணி உடல் மெலிகின்றாள்; இடையிடையே தன் அருமை மகன் முகம் பார்க்கின்றாள்; "வருக வருக மகனே" என்கின்றாள்; காலணி ஒலிக்க ஒலிக்க அவன் நடந்துவருந் தளர்நடையைக் காண்கின்றாள்; மகிழ்கின்றாள்; அவன் 'அம்மம்மா' 'அத்தத்தா' என்று பேசும் மொழிகளைக் கேட்கின்றாள்; மகிழ்கின்றாள்; மகனை நிலாமுற்றத்துக்கு அழைத்துச்சென்று, 'நிலா நிலா வா வா'

என்று அம்புலி காட்டி மகிழ்கின்றாள்; ஆனால், இம்மகிழ்ச்சிகளை அடுத்தடுத்து இடையிடையே தன் காதலன் ஒழுக்கத்தை நினைந்து நினைந்து வருந்துகின்றாள்.

இவற்றை மருதக்கலி கூறுமாறு காணுங்கள் :—

**"கிளர்மணி யார்ப்பார்ப்பச் சாஅய்ச்சாஅய்ச் செல்லுந்**
**தளர்நடை காண்டல் இனிதுமற் றின்னாதே**
**உளமென்னா நுந்தைமாட் டெவ்வம் உழப்பார்**
**வளைநெகிழ்பு யாங்காணுங் கால்;**
**ஐய, காமரு நோக்கினை அத்தத்தா என்னுநின்**
**தேமொழி கேட்டல் இனிதுமற் றின்னாதே**
**உய்வின்றி நுந்தை நலன்உணச் சாஅய்ச்சாஅய்மார்**
**எவ்வநோய் யாங்காணுங் கால்;**
**ஐய, திங்கட் குழவி வருகென யானின்னை**
**அம்புலி காட்டல் இனிதுமற் றின்னாதே**
**நல்காது நுந்தை புறமாறப் பட்டவர்**
**அல்குல்வரி யாங்காணுங் கால்,"** (மருதக் கலி: 15.)

இவ்வாறு தலைவி வருந்தும் நிலையைத் தலைவன் அறிகின்றான். அவன் செய்த தவறு காரணமாக அவன் நெஞ்சே அவனைச் சுடுகின்றது. தலைவியை நேரே நெருங்க அவன் அஞ்சுகின்றான்; அவளிடஞ் சென்று வேண்டுமாறு தன் பாணனை அனுப்புகின்றான். பாணன் சென்று அவ்வாறே வேண்டுகின்றான். தலைவி எதிர்மறுத்துக் கூறுகின்றாள். தலைவன் தோழியை வேண்டுகின்றான். தோழியுந் தலைவியின் கருத்தறிந்து எதிர்மறுக்கின்றாள். தலைவன் நேரே தலைவியிடஞ் செல்கின்றான். அப்போது அவள் ஊடுகின்றாள்.

"நீ பரத்தையரிடம் மகிழ்ந்ததை மறைக்க முயல்கின்றாய். ஆனால், அதனை உன் கண்ணி காட்டுகின்றதே! மல

ரிதழ்கள் வாடி உதிரக் காரணம் அதுதானே? பிறர் அலர் கூறுவர் என்னும் நாணத்தால் அதனை மறைத்தாயானும் அது வெளிப்பட்டுவிட்டதே! உன் மார்பில் கமழும் மணம் பரத்தையர் கூந்தல் மணந்தானே? உன் உடலில் காணப் படும் அந்த வடு, பரத்தையர் தொடியினால் ஏற்பட்ட வடுவே யன்றோ? நீ அவரைப் பிரிந்து இங்கு வந்தது ஏன்? 'என் பிரிவால் அழகு குன்றி என் கூட்டத்தால் அழகு பெறு வாள் இவள், இவள் அழகு நான் எண்ணியவாறு ஆகும்' என்று கருதி வந்தாயோ? 'கதிரவனைக் கண்டு மலருந் தாமரை, அவன் மறையத் தானுங் குவிதல்போல, என் பிரிவால் இவள் வாடியிருப்பாள்' என்று எண்ணி வந்தாயோ? 'மழைபெய்தால் செழித்துப் பெய்யாவிடில் கெடும் நிலம்போல என் வரவால் மகிழ்ந்து பிரிவால் அழிவாள் இவள்' என்று நினைத்து வந்தாயோ?'' என்று தலைவி புலந்து கூறுகின்றாள்.

"நீங்குங்கால் நிறஞ்சாய்ந்து புணருங்கால் புகழ்பூத்து
நாங்கொண்ட குறிப்பிவள் நலமென்னுந் தகையோதான்
எரியிதழ் சோர்ந்துக ஏதிலார்ப் புணர்ந்தமை
கரிகூறுங் கண்ணியை ஈங்கெம்மில் வருவதை;

சுடர்நோக்கி மலர்ந்தாங்கே படிற்கூம்பு மலர்போல்என்
தொடர்நீப்பின் தொகுமிவள் நலமென்னுந் தகையோதான்
அலர்நாணிக் கரந்தநோய் கைம்மிகப் பிறர்கூந்தல்
மலர்நாறு மார்பினை ஈங்கெம்மில் வருவதை;

பெயினந்தி வறப்பிற்சாம் புலத்திற்குப் பெயல்போல்யான்
செலினந்திச் செறிற்சாம்பும் இவளென்னுந் தகையோதான்
முடியுற்ற கோதைபோல் யாம்வாட ஏதிலார்
தொடியுற்ற வடுக்காட்டி ஈங்கெம்மில் வருவதை"

(மருதம் 13.)

துள்ளித் துள்ளிச் செல்லும் இனிய ஓசை அமைந்த கலியடிகளில் இக்கருத்து நலமுற அமைந்திருக்குந் திறம் அறிக.

அப்போது, தலைவன் பொய்ம்மொழிகள் கூறித் தலைவியைத் தேற்ற முயல்கின்றான்; "யான் ஒரு தவறுஞ் செய்திலேன்; நீ என்மேற் சினங்கொள்ளக் காரணம் இல்லையே; நீ காய்தல் வேண்டா" (மருதம்: 22) என வேண்டுகின்றான். உடனே தலைவி தான் கண்டதுங் கேட்டதுங் கூறி உண்மையை விளக்குகின்றாள். தலைவன் வேறுவழி காணுகின்றான். "நல்லாளே! யான் கூறியவை பொய்யே! அவற்றைத் தெளிவித்தாய். என் களவையுங் கையோடே பிடித்துக்கொண்டாய். நான் பிழைசெய்தது மெய்யே. இனி அதனை மறக்க. எனக்கு அருள்செய்க" என்று அவன் வேண்டுகின்றான் (மருதம்: 30). அவன் பணிமொழியும் உளநெகிழ்வும் தலைவியின் உள்ளத்தை உருக்குகின்றன. தலைவி பிழை மறந்து ஊடல் தீர்கின்றாள். இருவரும் ஒத்த அன்பு உடையராய் மகிழ்கின்றனர்; களவின்கண் பெறற்கரிதாய்ப் பெற்ற காதலின்பத்தைக் கற்பின்கண் இந்த ஊடல் வாயிலாக மீண்டும் பெறுகின்றனர். இத்தகைய ஊடலே மருதத்திணையின் உரிப்பொருள் ஆகும்.

## 2. ஒருவன்—ஒருத்தி வாழ்வு

"மருதத்திணையில் தலைவன் தனக்குரிய வாழ்க்கைத் துணையைப் பிரிகின்றான்; பரத்தையரை நாடிச் செல்கின்றான்; அவருடன் கூடி மகிழ்கின்றான்; மீண்டுந் தலைவியிடம் வருகின்றான். தலைவி ஊடுவதுபோன்று இருந்து பிறகு கூடுகின்றாள். இதுவும் நல்வாழ்க்கை ஆகுமோ? பரத்தையரிடத்து மகிழும் ஒருவன் தலைவன் ஆவனோ? அவன் தலைவியிடங் கொண்டது உண்மைக்காதல் ஆகுமோ?

அக்காலத்துப் பெண்மக்கள் இத்தகைய வாழ்க்கைக்கு உடன்பட்டிருந்தனரோ? இவ்வாழ்க்கை உரிமை வாழ்க்கை ஆகுமோ? பெண்கள் அக்காலத்தும் அடிமைகளாக இருந்தனர் என்பது இதனால் விளங்குகின்றதே!'' என்று பற்பல வினவுவர் சிலர். அவை ஆராய்தற்கு உரியனவே.

ஒருவன் ஒருத்தியோடு வாழ்தல் வேண்டும் என்பது சீரிய அறமே என்பதில் ஐயம் வேண்டா. ஆனால், அந்த அறத்தைப் போற்றி வாழ்வோர் மிகமிகச் சிலரே. மிகப் பலர் தவறுகின்றனர். தவறக் காரணம் என்ன? காரணம் பல கூறுப. போர்க்களத்தில் ஆண்மக்கள் சென்று பொருது மாள்வதாலும், இளமையிற் சாதல் அவர்களிடையே மிகுதியாய் இருத்தலாலும் மக்கட்கணக்கில், ஆண்களைவிடப் பெண்கள் பெருந்தொகையினராக இருக்கின்றார்கள்; ஆதலின், ஆண்களிற் சிலர் பெண்கள் பலரோடு வாழ்தல் நேர்கின்றது என்று உலக வரலாற்று ஆராய்ச்சியாளர் கூறுவர். பொருளியலில் ஆண்களுக்கு இருக்கும் உரிமை பெண்களுக்கு இல்லை; ஆதலால் இந்த நிலை ஏற்படுகின்றது என்று பொருளியல் அறிஞர் கூறுவர். ஆனால், கலித்தொகையில் காணுந் தமிழ்மகள் பொருளியலில் மிக்க உரிமை பெற்றிருந்தாள் என்றே அறிகின்றோம். மகப்பேற்றிற்குப் பிறகு தலைவியின் அன்பிற் பெரும் பகுதியைக் குழந்தை பெறுதலால் தலைவன் பிறரை நாடுதல் நேர்கின்றது என்பது ஒருசாரார் கருத்து. பெண்களை அடிமைகளாக நடத்தும்வரை இக்கொடுமை இருக்கும் என்பர் சிலர். ஆனால், மேனாட்டில் அந்த அடிமை நிலை இல்லையன்றோ? அந்நாட்டிலும் இந்நாளிலும் கணவனும் மனைவியும் ஒருவரை ஒருவர் தத்தம் உடைமையாகக் கருதுகின்றனர் என்றும், ஒருவன் ஒருத்தியோடு வாழ்தல் என்பது உண்மையில் இல்லை என்றும், ஆண்களே பெரிதுங்

தவறி நடக்கின்றார்கள் என்றும், மேனாட்டைத் திறம்பட ஆராய்ந்து பற்பல நூல்கள் எழுதிய அறிஞர் பெர்னார்ட் ஷா கூறுகின்றார்.

காரணம் பல ஆயினும், அடிப்படையான உண்மை ஒன்றே என விளங்கும். இத்தவறு செய்வோர் பெரும்பாலும் ஆண்மக்கள் என்பதே அந்த உண்மையாகும். பல நூற்றாண்டுகட்கு முன்னமே ஆங்கிலப்புலவர் ஷேக்ஸ்பியர் இதனை விளக்கிச் சென்றார். எனவே, மக்கள் வாழ்வில் என்றும் எங்கும் உள்ள இக்குறையைத் தமிழ்நூல் கூறுதல் இழுக்கு ஆகுமோ? உலக வாழ்வைத்திருத்தமாக எடுத்துக்காட்டி, மக்களின் அறிவுக்கு விருந்தாய் அமைந்து, முற்போக்குக்குக் கருவியாய் விளங்குவதன்றோ தண்டமிழ் இலக்கியம்? உண்மையான இலக்கியம் இவ்வாறுதானே இருத்தல் வேண்டும்? "இலக்கியம் என்பது வாழ்க்கையின் ஆராய்ச்சியே" என்றார் ஆங்கிலப் புலவர் மாத்யூ ஆர்னல்ட். கேம்பிரிட்ஜ் ஆசிரியர் ரிச்சர்ட்ஸ் என்பவர், "செய்யுளிற் காணும் உலகம் உண்மையான உலகத்தினின்றும் வேறுபட்டதன்று; அது உலகவாழ்வின் கூறுகளையே ஒழுங்குபடுத்திக் காட்டுவது" என்றார்.

## 3. தமிழர் பெருமைக்கு ஏலாதன

இறையனார் அகப்பொருளுக்கு உரை கண்ட ஆசிரியரும் தலைவனுக்குற்ற குறையைப்பற்றி ஆராய்ந்து அதனை விளக்கப் புகுந்தார். அவர் கூறுமாறு :—

"....தலைமகளை எய்தாத முன்னை பரத்தையரை உடையனென்பது. எனவே, மேற்சொல்லப்பட்ட குறை எய்தாதோ எனின் எய்தாது. குரவர்கள் இவன் அறியாமையே இவன் உரிமை இது எனவும் இவன் யானையுங் குதிரையும் இவையெனவும் மற்றுமெல்லாம் இவற்கு என்று வகுத்து வைத்துத் தாம் வழங்கித் துய்ப்ப என்பது. அவ்

வகையே குரவர்களான் இவன் உரிமை என்றே வளர்க்கப் பட்டாராகலான் தலைமகளை எய்துவதன்முன் உளர் என் பது. இவன் முன்னே தன் உரிமையாவது அறிந்தவாறு என்னை எனின், தலைமகன் தலைமகளை நீங்கித் தருமமும் அருத்தமும், உள்பட்டுத் தலைமகள் மாட்டுப் போதரு மிடத்து அவர் முன் சொன்னவாறே குழலும் யாழுந் தண்ணுமையும் முழவும் இயம்புப. இயம்பினவிடத்து இஃது என்னை என்னும்; என்றக்கால், அது நின் உரிமை யன்றோ என்ப. என்றார்க்கு, அஃது என் உரிமையாயின வாறு என்னை என்னும். என்றவிடத்து நின் குரவர்க ளான் நினக்கு உரிமையாக வகுக்கப்பட்டார் என்ப. ஆயின் நாங் குரவர் பணி மாறுகொள்ளலாகாது என்பத னால் காண்டற்குச் செல்லும்; சென்றானை அவர் தங்கண் நயப்பிப்ப என்பது.'' (களவியல் : 40 உரை.)

மிக விழுமிய நாகரீகம் பெற்று உயர்ந்திருந்த தமிழ் மக்கள்மீது உரையாசிரியர் பெருங்குற்றஞ் சுமத்துகின் றார். பெற்றோர் தம் மகனுக்கு யானையுங் குதிரையும் வகுத்து வைத்தமை போன்று பெண்கள் (பரத்தையர்) சிலரையும் இவன் துய்த்தற்பொருட்டு வகுத்து வைத்தன ராம். பெண்களின் உரிமைமணங் கமழுந் தமிழகத்தில் யானை குதிரைகட்கு ஒப்ப அவரையுங் கருதினர் என்றல் ஏற்புடைத்தோ? மகன் அறியாமலேயே அவனுரிமை யென அவர் வகுக்கப்பட்டனராம். அவரே அவனை அணுகி, ''யாம் யார்? அறிவையோ?'' எனக் கேட்டு அறிவித்து நயப்பிப்பாராம். இது மற்றொரு பெருங்குறை. அறிவுடைய தலைவனாகிய அவன் அவரை நயந்தனனும். இவை தமிழர் பெருமைக்கு ஏலாதன. இத்தகைய சிறுவர் விளையாட்டுக்கள் தமிழ்ச் சான்றோரிடை இருந்தன அல்ல என்க.

## 4. தலைவி குறைகூறல்

மருதக்கலி கூறுந் தலைவன் எத்தகையன்? அடக்க மில்லாத வயது ஆகையால் தலைவன் தவறி நடந்தாலும். அவனைக் குறித்து ஊரார் சேரச் சிரிப்பதாகத் தலைவி கூறுகின்றாள். அத்தலைவன் தன் குற்றத்தைத் தலைவியிடம் உடன்படுகின்றான்; மன்னிப்புக் கேட்கின்றான்; அது தன் உரிமை எனக் கொள்கின்றான் அல்லன்.

தலைவி அவனைப்பற்றித் தன் மகனிடம் கூறும் மொழிகளை அறிக:—"என் செம்மலே! அழகால் உன் தந்தையை ஒத்திருக்கின்றாய். உன் தந்தை பகைவரை வென்று களங்கொள்ளும் வீரன்; நுகத்துப் பகலாணி போன்று நடுநிலையோடு முறைசெய்தலில் வல்லவன்; வேண்டியார்க்கு வேண்டியன கொடுத்துக் காக்கும் அருளாளன். அவ்வீரத்தாலும், நடுநிலையாலும், ஈகையாலும் நீ உன் தந்தையை ஒப்பாயாக. ஆனால், மனம் ஒன்றுபட்டு வாழ்ந்த மகளிரைப் பிரிந்து வாழுந்தன்மை, அவர் அழகு கெடுமாறு வருத்துந் தீமை, அவர் துன்பம் அறியாது வாழும் பரத்தைமை உனக்கு வேண்டா."

"செம்மால், வனப்பெலாம் நுந்தையை ஒப்பினும் நுந்தை
நிலைப்பாலுள் ஒத்த குறிஎன்வாய்க் கேட்டொத்தி
கன்றிய தெவ்வர்க் கடந்து களங்கொள்ளும்
வென்றிமாட் டொத்தி பெருமமற் றெவ்வாதி
ஒன்றினேம் யாம்என் றுணர்ந்தாரை நுந்தைபோல்
மென்றோள் நெகிழ விடல்;

பால்கொளல் இன்றிப் பகல்போல் முறைக்கொல்காக்
கோல்செம்மை ஒத்தி பெருமமற் றெவ்வாதி
கால்பொரு பூவிற் கவின்வாட நுந்தைபோல்
சால்பாய்ந்தார் சாய விடல்;

வீத லறியா விழுப்பொருள் நச்சியார்க்
கீதல்மாட் டொத்தி பெருமமற் றெவ்வாதி
மாதர்மென் னேக்கின் மகளிரை நுந்தைபோல்
நோய்கூர நோக்காய் விடல்." (மருதம் : 21)

இவற்றல் அறிவன யாவை? தலைவன் அறிவும் ஆற்றலும் அருளும் நிறைந்தவனே. அவற்றை முறையே அவனுடைய முறைசெய்தலாலும் ஆண்மையாலுங் கொடையாலும் அறியலாம். ஆனல், அவன் ஒரே ஒரு குறை உடையன். அஃதாவது அவனது பரத்தைமை.

அவனிடம் இக்குறை இருப்பினும், அவன் தன் தலைவியிடங் கொண்ட காதல் உண்மையானதே ஆகும். தன் அன்பைப்பெற விழையும் பரத்தையர் இருக்க, தலைவியின் வருத்தம் அறிந்தவுடனே, அவன் தலைவியிடம் வருகின்றன்; தலைவியின் ஊடலை அறிகின்றன்; ஊடலைத் தீர்க்க முயல்கின்றன்; "என்பால் குற்றம் உளதாயின் நீ காய்தற்கு உரிமை உண்டு" என்கின்றன்; குற்றம் உடன்படுகின்றன்; தலைவி தன்னைப் பழித்து வன்மொழி கூறினும், தான் பணிமொழியே கூறுகின்றன். இவை அவன் உள்ளத்தில் உள்ள உண்மையான காதலை உணர்த்துவனவல்லவோ?

## 5. தமிழ்மகள் உரிமை வாழ்வு

எனவே, அக்காலத்துத் தமிழ் மகளிர் பரத்தைமைக்கு உடன்பட்டிருந்தனர் என்றும், இஃது அவர்தம் அடிமைநிலையை உணர்த்துகின்றது என்றுங் கொள்ள இடமில்லை. பண்டைத் தமிழ் நூல்கள்போலப் பெண்ணுரிமையைப் போற்றிய நூல்கள் வேறு எம்மொழியிலும் இல்லை. மனைவிமீது ஐயுற்றதாகக் கூறுதலைத் தமிழர் கயமை என்று கருதினர் என்பதைத் தமிழ் கற்றேர் அறிவர். தமிழ்நூல்களில் அக்கயமை இடம்பெறவில்லை. ஆனல்

பிறமொழி நூல்களில் அஃது இடம்பெறுகின்றது. ஆங்கில நூல்களிலும் அஃது உண்டு. தலைவி தலைவன்மீது ஐயுற்றதாகக் கூறுவனவே தமிழ் நூல்கள். அவ்வாறு கூறுவதால் உயர்வு பெண்பாலார்க்கேயன்றோ? அவரை நல்லார் என்றும், நிறையுடையார் என்றுந் தமிழுலகங் கருதிற்று. தவறு பெரிதும் ஆண்களைச் சார்ந்ததே என்று உலக அறிஞர் எடுத்துக் காட்டுவராயின், தமிழ்நூல்கள் இந்த உண்மையையே கூறுவனவாயின், தமிழ்நூல்களின் விழுப்பத்தை உணர்ந்து போற்ற வேண்டுவதன்றோ நங் கடமை?

தலைவன் பரத்தையரிடமிருந்து பிரிந்து வந்தபோது தலைவி ஊடிக் கூறுஞ் சொற்களை உன்னுக:—

**"தம்மை, வருகென்றார் யார்கொலோ ஈங்கு."** (மருதம்:20.)

**"தொடிய எமக்குநீ யாரை பெரியார்க்**
**கடியரோ ஆற்று தவர்."** ( ,, 23.)

**"யாரிவன் எங்கூந்தல் கொள்வான் இதுவுமோர்**
**ஊராண்மைக் கொத்த படிறுடைத் தெம்மனை**
**வாரனீ வந்தாங்கே மாறு."** ( ,, 24,)

**"யாரை நீ எம்மில் புகுதர்வாய்."** ( ,, 33.)

"உன்னை இங்கு வரச்சொன்னவர் யார்? நீ எம்மைத் தொடல்வேண்டா. நீ யார் எம்மைத் தொட? பிரிவாற்றாது யாம் வருந்துகின்றோம் ஆயினும் உனக்கு யாம் அடிமையோ?" என்னும் வினாக்களில் உரிமைமணங் கமழ்தலை அறிக. தலைவி தலைவன் வீட்டில் வாழ்கின்றாள் என்று எண்ணுவோர் பலர். ஆனால் தமிழ்த்தலைவி வாழும் வீடு அவள் வீடே ஆகும். அதனை என் வீடு என்று கூறத் தலைவனுக்கு உரிமை இல்லை. வீட்டுக்காரன் என்று கூறல் பிற்காலத்து வழக்கு; நேற்றுத் தோன்றியது. காரன் காரிகளைப் பிறக்கணிக்க. அவற்றால் வீடு கெட்டது. மனையும்

இல்லும் நோக்குக. மனைவி என்றும் இல்லாள் என்றுங் கூறினர் நாகரிகத்தமிழர்; மனைவன் என்று கூறினாரல்லர்; இல்லான் என்றாலோ, தலைவன் ஒன்றும் இல்லாதவன் ஆவன். இதனைத் தெளிவுபடுத்துகின்ற "எம்மனை" "எம்மில்" என்னுந் தொடர்களை நினைவு கூர்க.

இத்தகைய உயர்நிலையே மகளிர்க்குத் துணிவும் நிறையுந் தன்னுரிமையும் நல்குவன. இன்றேல், துணிவு ஏது? நிறை ஏது? தன்னுரிமை ஏது? இவற்றை உடையராய் வாழ்ந்த தமிழ் மகளிர், இவற்றை எங்ஙனம் பாராட்டினர் என்பதை மருதக்கலி: 4 போன்ற செய்யுட்களைக் கற்று அறிந்து மகிழ்க.

துணிவும் நிறையுந் தன்னுரிமையும் உடைய தமிழ் மகளிர் பொன்னகையாலும் பட்டுடையாலும் பிறபொருளாலும் அமைந்து மகிழ்வரோ? பொம்மைத் திருமண வாழ்விற்கு உடன்படுவரோ? இக்காலத்தோ, நகையும் உடையும் பொருளுமே திருமண உடன்பாட்டிற்கும் அதன் பின் வாழ்க்கை அமைதிக்கும் வேண்டற்பாலனவாக உள்ளன. தமிழர் வீழ்ச்சியைக் காண்க. குடும்பங்களிலுஞ் சுற்றத்தாரிடையும் நிகழுங் குழப்பங்கட்குக் காரணங்களை ஆராய்ந்து சென்றால், அடிப்படையில் பொன்னகையும் பட்டுடையும் பிறபொருளுங் காரணமாக நிற்கும். இஃது அனைவரும் அறிந்த உண்மை.

இதுபற்றி அவை வேண்டா என்றுதல், வெறுக்க என்றுதல் கொள்ளற்க. அவை வேண்டும்; ஆனால் அவையே வேண்டும் என்பது தவறு. அவற்றினுஞ் சிறந்த அன்பும் அறிவும் முதன்மையாக வேண்டும். அன்பும் அறிவும் இல்லா வாழ்வு வேண்டா என வெறுக்குந் துணிவு மருதத் தலைவிக்கு இருந்தது; அன்பும் அறிவும் ஊடல் வாயிலாகப் பெறுதற்குரிய நிறை இருந்தது; அன்பும் அறிவும்

பெற்றபின் போற்றுதற்கேற்ற தன்னுரிமையும் இருந்தது. மேற்கூறிய கலிப்பாட்டே இதற்குச் சான்றாகும்.

## 6. இன்மொழியும் உளநெகிழ்வும்

உயிர்களுள் பெரும்பான்மையும் ஆண்களே பெண்களைத் தேடிச்சென்று முயன்று துணையாகப் பெறுகின்றன. தமக்குரிய துணையை மகிழ்விக்கும் பொருட்டு அவை செய்யும் முயற்சிகள் பலவகைப்படும். வண்டினங்கள் சில துணைகட்குச் சிறந்த உணவுகொடுத்து மகிழ்விக்கின்றன. மீன்கள் சில தம்மை அழகுறப் புனைந்துகொள்கின்றன. சில பறவைகளும் அவ்வாறு புனைந்துகொள்கின்றன. விலங்குகள் சில தம் உடலில் இனிய மணம் கமழப்பெற்றுத் திரிந்து துணையை மகிழ்வித்தல் உண்டு. பறவைகள் சில வேறுபட்ட இனிய ஒலிகளை எழுப்புகின்றன. சில இறகுகளை விரித்துத் துணைமுன் கூத்தாடுகின்றன. ஆஸ்ட்ரேலியாவில் உள்ள பறவைகள் சில கூத்தாட்டவைகளும் அமைக்கின்றனவாம். (அவற்றுள், பதினான்கு அடி நீளமும் ஆறடி அகலமும் இரண்டடி உயரமும் உள்ளவைகளும் காணப்பட்டனவாம்.)

அறிவு வளரவளர, இம்முயற்சி வேறுபடுகின்றது; சிறப்படைகின்றது. மேற்கூறிய உணவு, அழகு, மணம், கூத்து, இசை முதலியவற்றால் துணையை மகிழ்வித்தல் மக்கள் வாழ்விலும் உண்டு. நாகரிக வளர்ச்சிக்கேற்ப அவற்றில் மாறுதல்கள் ஏற்படுகின்றன. ஆனால் மக்கள் இவ்வளவில் நிற்றல் இயலாது. மக்கள் ஐம்புலன் அறிவோடு மன அறிவும் உடையவர். உணவு முதலியவை ஐம்புலன் அறிவுக்கு விருந்தாகும். இன்மொழியும் உளநெகிழ்வுமே மன அறிவுக்கு வேண்டுவன. மக்கள் வாழ்வில் இவையிரண்டும் மிகமிக இன்றியமையாதவை.

இன்மொழியும் உளநெகிழ்வும் பெறும்பொருட்டே தலைவி ஊடல் நிகழ்த்துகின்றாள்; ஊடலால் அவற்றைப் பெறுகின்றாள்; மகிழ்கின்றாள். அவற்றால் காதல் சிறந்து இன்பம் மிகுகின்றது.

"ஊடுதல் காமத்திற் கின்பம் அதற்கின்பங்
கூடி முயங்கப் பெறின்."

இப்பாட்டு யாருடையது? அறம் விளக்கிப் பொருள் விரித்துக் காமத்துப்பாலும் இயற்றிய திருவள்ளுவருடையது. திருக்குறளின் இறுதிச் செய்யுள் இதுவே. களவுங் கற்புங்கூறிய வள்ளுவர், புலவி, புலவிநுணுக்கம், ஊடலுவகை என மூன்று அதிகாரங்களைத் தம் நூலின் முடிவில் அமைத்தார்; காதல் வாழ்க்கையில் ஊடல் எத்துணை இன்றியமையாதது.

"புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்
ஊடல் அவற்றின் நிமித்தம் என்றிவை
தேருங் காலைத் திணைக்குரிப் பொருளே"

என்று உரிப்பொருள் கூறப்புகுந்த தொல்காப்பியனாரும் ஊடலை இறுதிக்கண் வைத்து நூற்பா யாத்தமையுங் காண்க.

## 7. பரத்தையிற் பிரிவு

ஊடல் நிகழ்வதற்குக் காரணமாகத் தலைவன் பரத்தையரிடஞ் செல்லல் வேண்டும் என்பது இல்லை. பரத்தைமை இல்லாதவிடத்தும், யாதொரு தவறுந் தலைவன் செய்யாத விடத்தும், தலைவி ஊடுதல் உண்டு என்றார் திருவள்ளுவர்.

"இல்லை தவறவர்க் காயினும் ஊடுதல்
வல்ல தவரளிக்கு மாறு" (குறள்-1321)

அவர் பரத்தைமையைக் கடிந்து அறநூல் எழுதியவர் ஆதலால், ஊடலைத் தூயதாக்கினார்.

பாணர் பரத்தையரைத் தேரேற்றிக்கொண்டு செல்லுதல், தலைவனைத் தேடும் பாணர் பரத்தையர் மனைதோறுஞ் சென்று வினாதல், பரத்தையர் தலைவனை வலிதிற் பற்றிச் செல்லுதல் முதலானவற்றை மருதக்கலியுள் அறிதல் வெறுப்பாக உள்ளது. நற்றிணை, அகநானூறு முதலான நூல்களிலும் மருதத்திணை பற்றிக் கூறும் பாடல்கள் இவற்றை மிகுதியாய்க் கூறுகின்றன. இவற்றால், தமிழ் நாடு பரத்தையர் பெருகிய நாடாக இருந்ததுபோலும் எனக் கொள்ளல்வேண்டா. ஊடல் நிகழ்வதற்கும் தலைவன் உள்ளத்தைத் தலைவி அறிவதற்கும் ஒரு காரணம் வேண்டுமன்றோ? அதற்கெனவே இப்பரத்தைமை கூறப்பட்டது. தலைவன் கருத்தைத் தலைவி எளிதில் அறிவதற்கு ஏற்ற கருவியாக இருத்தல்பற்றியும், மக்களுள் ஒருசிலர் வாழ்க்கையில் நிகழ்தலுண்மைபற்றியும் இதனைத் தொல்காப்பியனார் கூறினார். பின்வந்த புலவர்களோ, பரத்தையரைப்பற்றியும் அவர்தம் இல், சேரி, பேச்சு, செயல் முதலியனபற்றியும் வரம்பின்றி விரித்துரைக்கத் தொடங்கினர். ஆதலின், அவர் கூறுவனவற்றை அவ்வாறே கொள்ளாது, தமிழ்நாட்டிற்குப் பொருந்தாதவற்றைத் தள்ளியே கொள்ளுதல் வேண்டும்.

## 8. உளநூல் நுட்பம்

இனி, ஊடல் எத்தகையது? அது மிகமிக நுட்பமானது; உளநூலின் நுட்பமெலாம் அதன்கண் உள்ளது எனலாம்; உண்மையை மருதக்கலியுள் அறிக.

தலைவன் பரத்தையுடன் இருந்தகாலத்து அவள் முடியிலிருந்து உதிர்ந்த பூந் துகள் அவன் ஆடையிற் சிந்திக் கிடந்தது. அதனைப்பற்றித் தலைவன் எண்ணிலன்; எண்ணியிருப்பின் அகற்றியிருப்பன்; ஆதலின், அதனை அறியாது, தலைவியிடஞ் சேர்ந்தான். தலைவி அப்போது தன் மகனைத்

தழுவி விளையாடிக்கொண்டிருந்தாள். தலைவன் வரவை அவள் அறிந்திலள். மகன் தந்தையைக் கண்டவுடன் 'அத்தத்தா' என்றான். உடனே தலைவி திரும்பிப் பார்த்தாள்; ஊடினாள்: "உன் ஆணைவழி நடப்பதன்றி யான் தவறி நடப்பேனோ?" என்றான் தலைவன். "பரத்தையர் முடித் துகள் சிந்திக்கிடத்தலை விளக்கும்பொருட்டுக் காற்றின் எதிரே இவ்வாறு நிற்கின்றாயோ?" என்றாள் தலைவி. எத்துணை விரைவில் தலைவி, தலைவனைக் கண்டு, ஆடையில் கிடந்த துகளை நோக்கி, துகள் கிடந்த காரணம் அறிந்து, காற்று வருந்திசை தெரிந்து, அவன் நிற்குந் தன்மைக்கு ஒரு காரணம் புனைந்து, அக்காரணங் கூறி ஊடத் தொடங்கினள் பாருங்கள்!

தலைவிமாட்டு இத்துணை அறிவின் நுட்பங் கண்டது போலவே, தலைவன்மாட்டுங் காண்க. அவன் ஊடல் தீர்க்குமாறு ஆராய்க.

தமிழர்க்கு விருந்தோம்பல் சிறந்த பேறு அன்றோ? விருந்தினரை நகை முகத்தாலும் இன்மொழியாலும் மகிழ்வித்தல் வாழ்க்கைத்துணைவியின் கடமை. தலைவி ஊடியிருப்பதை அறிந்த தலைவன் விருந்தினர் ஒருவரை உடன் அழைத்துக்கொண்டு வீட்டினுள் நுழைந்தான். தலைவி விருந்தினரைக் கண்டாள்; ஊடலை மறந்தாள்; கடமையைக் கருதினாள்; விரைந்து எழுந்தாள்; நகைமுகங் கொண்டாள்; இன்மொழி பூண்டு எதிர்கொண்டாள்; "ஏன் வந்தாய்?" என்று வினைதலை விடுத்து, "வருக, வருக; நும் வரவு நல்வரவாகுக" என்றழைத்தாள். தலைவன் எண்ணம் நிறைவேறியது. அவன் அகமகிழ்ந்தான்.

மற்றுமொரு முறை அவன் செய்தது வேறு; ஓராண்டு நிரம்பிய தன் குழந்தையிடஞ் சென்று, அவனைத் தழுவிக்

கொண்டு வருத்தத்தால் மெலிந்து உறங்குவதுபோல் கிடந்தான். தலைவி மனங்கசிந்து ஊடல் தீர்ந்தாளாம். இந் நிகழ்ச்சிகளைத் தலைவி தோழிக்குக் கூறுவதாக அமைந்துள்ள மருதக்கலி: செய்யுள்-10 படித்து இன்புறற்பாலது.

## 9. மருதம்-மருமகன்-மருமகள்

நுண்ணிய அறிவிலார் ஊடல் நிகழ்த்துதலும், அது தீர்ந்து இன்பம் உறுதலும் இயலாது. அதனாலன்றோ, தமிழ் முன்னோர் ஊடலுக்கு மருதநிலங் கூறினர்? மருத நிலம் நீர் நிரம்பியது; நெல் விளைப்பது; அறுசுவை உணவும் அளிப்பது. சொல்லால் (நெல்லால்) ஆகிய சோற்றை உண்ணும் மக்கள் அறிவிற் சிறந்து விளங்குதலும் அரிசிக்கும் மூளைக்கும் உள்ள தொடர்பும் உலகறிந்த உண்மைகள். மற்றெல்லா நாடுகளினும் வறுமைமிக்க நாடு தமிழ் நாடே. வறுமை மிக்க நிலையிலும் அறிவிற் சிறந்த மக்களைத் தமிழ் நாடு பெற்றுவருகின்றது; (வறுமை நீங்கி வளம் பெறுமாயின் அறிஞர் தொகை அளவின்றிப் பெருகுமே! அந்நாள் என்று வருமோ?) காரணம் என்ன? காவிரியும் பெண்ணையும் பாலாறும் பொருநையும் பாயும் மருத நிலங்களும் அந்நிலங்களால் பெறுஞ் சோறுமே யாகும். அறிவின் முனைப்பால் நிகழ்த்தும் ஊடலுக்கு நிலம் மருதம் என்று தொல்காப்பியனார் வகுத்த திறங் காண்க. அறிவு தூய்மை பெற்றுத் தெளிந்து விளங்கும்பொழுது வைகறையே, அதனையே ஊடலுக்குரிய பொழுதாக வகுத்ததுங் காண்க.

தலைவன் சிறைப்புறமாகத் தலைவி புலந்து கூறுங் கூற்றுக்கள் பலவும் அறிவின் நுட்பத்தை அடிப்படையாகக் கொண்டனவே. அவை, தலைவன் தான் செய்த தவறு உணர்ந்து வருந்தித் திருந்தி நல்வாழ்வு வாழுமாறு அவனைத் தூண்டவல்லன; திருத்தவல்லன. அவ்வாறு

கடிந்துகூறித் திருத்துவதில் தலைவனுடைய தாய்தந்தையரும் தலைவிக்கு ஒப்பாகார் என்று தோழி கூறுவதாக ஐங்குறுநூற்றில் ஒரு செய்யுள் உள்ளது.

"ஒண்டொடி மடமகள் இவளினும்
நுந்தையும் யாயுங் கடியரோ நின்னே"

(ஐங்குறு. 98.)

இத்தகைய அறிவின் மாட்சியே மகளிர்க்கு அணிகலன் ஆதலைத் தமிழ்முன்னோர் அறிந்தனர். அறிவின் மாட்சி உடையவரே காதல் வாழ்வுக்கு உரியவர். அஃது இல்லாதவர் காதலும் அறியார்; ஊடலும் அறியார். அவர் புறத்தே அழகு பெறினும் அகத்தே அழகு இன்மையால், அவரை மணந்த கொழுநர் அவரை விடுத்துப் பிறரைத் தேடி அலைகின்றனர். அத்தகையார் ஊடலால் மருவும் மருதம் அறியார்; ஆதலால், மருமகன் மருமகள் என்னுஞ் சிறப்புப் பெறுவதற்கு உரியவர் அல்லர்.

## 10. புலமையும் புதுமையும்

சிறந்த உளவியல் நூல் எனத்தகுந்தது மருதக்கலி என்று அறிந்தோம். உலக வாழ்வின் கூறுகளை எழுத்தோவியம் ஆக்கிக் கற்போர் கருத்தில் ஆழப்பதியுமாறும், நினைதொறும் நினைதொறும் இன்பவூற் றெழுமாறும் செய்யுள் இயற்றும் புலவர்தம் பாடல்கள் இதன்கண் உள்ளன என்று அறிதலும் வேண்டும்.

இடைக்காலத்துப் புலவர்கள் இல்லாததைப் புனைந்து கூறி மகிழ்ந்தனர்; அவ்வாறு புனைதலும் ஓரளவிற்கு வேண்டுவதே. ஆங்கிலம் முதலிய பிறமொழி இலக்கியங்களிலும் அம்முறை உண்டு. ஆனால், சிலர் அளவுமீறிப் புகழத் தொடங்கினர்; மதில் வாயிலில் திங்கள் நுழைந்து சென்றது என்பர்; சிறூர் இயற்றிய மணற்சிற்றில் வானளாவி

யது என்பர்; யானையின் மதநீர் வெள்ளம்போல் பெருகி ஆற்றோட்டத்தில் கலந்தமையால் ஆற்றுநீர் "உண்ணவுங் குடையவும் உரித்தன்றாயது" என்பர். ஆனால், பண்டைத் தமிழ்ப்புலவர் உள்ளதைக் கூறுவதிலேயே புலமையும் புதுமையும் பெரிதும் அமைத்தனர்.

தலைவன் பரத்தையர் சேரியினின்று நீங்கி வீட்டிற்குள் நுழைந்தான்; தலைவி தன் குழந்தையுடன் பேசிக்கொண்டிருந்தாள்; தலைவனுடைய குற்றத்தையும் அப்பேச்சினிடையே எடுத்துக்கூறினாள். தலைவன் மறைந்திருந்து வருதலைக் குழந்தை பார்த்தது; நகைமுகங் காட்டியது. "யான் இவன் தந்தையைப் பழித்துக்கொண்டிருக்க, இவன் யாரை நோக்கிச் சிரிக்கின்றான்" என்று தலைவி உடனே திரும்பிப் பார்த்தாள்; தலைவன் வரவு அறிந்தாள். "என் மேல் பிழை ஒன்றும் இல்லையே!" என்று சொல்லித் தலைவன் குழந்தையைத் தருமாறு வேண்டினான். வேண்டு முன்னமே குழந்தை தந்தையின் மார்பிலே பாய்ந்தது. "யானோ சினந்து விலக்குகின்றேன். இவனோ மலையிற் பாயுஞ் சிங்கம்போல அறமும் அன்பும் இல்லாத் தந்தை மார்பில் பாய்கின்றானே!" என்றாள் தலைவி. இந்த எழுத்தோவியத்தை மருதக்கலி: 21 காட்டுகின்றது. கண்டு மகிழ்க.

மருதநிலக் கருப்பொருள்களை—தாமரை செங்கழுநீர் முதலான மலர்களையும், நெல் கரும்பு முதலான பயிர்களையும், அன்னம் வண்டு முதலான உயிரினங்களையும்—உள்ளுறையுவமமாகவும் ஏனையுவமமாகவும் அமைத்துக் கலியோசை கெழுமிய தரவுகளில் புலவர் பாடுந்திறம் கலைவிருந்தாயுள்ளது. மருதக்கலியுள் பதினொரு செய்யுட்களில் உள்ளுறையுவமம் அமைந்துள்ளது. ஈங்கு இடமில்லையாதலின் அவை விடப்பட்டன.

நீருள் தோன்றும் நிழலைப் பலருங் கண்டிருப்பர். அந் நிழல் குறுகி வளைந்து தோன்றும். நீர் அசைவால் அந்நிழ லும் அசைந்து அசைந்து தோன்றும். குளக்கரையில் நின்று இத்தகைய தோற்றங் கண்டவர்க்குப் புலவரது உவமைத்திறம் விளங்கும். அடிமையாகிய கூனி ஒருத்தி யின் நுடங்கிய மெல்லிய குறுகிய சாயலுக்கு அதனை உவமையாக்குகின்றார் புலவர்; அந்தக் கூனியை விரும்பிய குறளான அடிமை ஒருவன் கூற்றாக அமைக்கின்றார்.

"நீருள் நிழல்போல் நுடங்கிய மென்சாயல்
ஈங்குருச் சுருங்கி
இயலுவாய் நின்னொ டுசாவுவேன் நின்றீத்தை"

(மருதம் : 29.)

இவ்வுவமை விளக்கும் நகைச்சுவை வியக்கத்தக்க தன்றோ?

இனி அக்கூனி குறளை இகழ்ந்து நகைக்கும் முறை வருகின்றது. ஆமை தன் இயற்கை நிலையில் இருத்தலையும் ஊர்தலையும் பலர் கண்டதுண்டு. புலவர் அதனை எடுத்து நிறுத்துகின்றார்; கையுங் காலும் மிகக் குறுகிய குள்ளன் ஒருவனுக்கு உவமையாக அமையும் வகையை ஆராய்கின் றார். உடனே, அவன் கூற்றாக அமைக்கின்றார். "ஆமையை எடுத்து நேரே நிறுத்தினாற்போன்றது உன் தோற்றம். உன் குறுகிய கைகள் இரண்டையும் விலாவுக்குள்ளேயே வீசி வருகின்றாய். உன் நடையே நடை; காமனார் நடப்பது போல இருக்கின்றதே!" என்று அவள் கூறுகின்றாள்.

"யாமை எடுத்து நிறுத்தற்றால் தோளிரண்டும் வீசி
யாம்வேண்டேம் என்று விலக்கவும் எம்வீழுங்
காமர் நடக்கு நடைகாண்"

(மருதம் : 29.)

இவ்வாறாகக் கூனியுங் குள்ளனும் நகைச்சுவையைப் பெருக்கிவிட்டுப் பின்னர், அளவுமீறின் அச்சுவை கெடும் என்று எண்ணி, "இனி, இகழ்ந்து கூறி நகைத்தலை நிறுத் திக்கொள்வோம்" என்று உடன்படுகின்றனர். உரிமை யில்லா அடிமைவாழ்வு உடைய அவர்தம் பேச்சு இழிந்த தொன்றாயினும், சிறந்த உவமைகள் அமைந்து நகைச்சுவை பயத்தலை அறிக.

ஆனால், இக்காலத்துக் கலையுலகில் நெளியும் நகைச் சுவை எத்தகையது? மிகமிக இழிவானது எனலாம். நாட கத்திற்கு நகைச்சுவைப்பகுதி வேண்டும். தமிழ்நாட்டுப் படக்காட்சிகளில் உள்ள நகைச்சுவைப் பகுதிகள் எத் தன்மையானவை? கணவன் மனைவியை அடித்தல், மனைவி கைம்மாறு செய்தல், விளக்குமாறுகொண்டு வெருட்டல், அகப்பையோ கரண்டியோ கொண்டு அடித்தல், கணவ னுடைய காதைப் பிடித்துத் திருகல், குடுமியைப்பற்றிக் கழறல், கூறத்தகாத செதுமொழிகளைக் கூறல்—இவை போன்றவை படக்காட்சிகளில் பெரிதுங் காணப்படும். இவற்றைத் திரள் திரளாகச் சென்று கண்டு இன்புறுகின் றோம். பிறநாட்டு மக்கள் இவற்றைக் காணின், "தமிழ் மக்கள் ஊடல் இவைதாம் போலும்! அம்மக்கள் இவ் வளவு அநாகரிகம் உடையவரே போலும்! அவர்தம் இலக்கியமும் மொழியும் இவ்வாறு இழிவானவையே போலும்!" என்று எண்ணி இகழத் தடை உண்டோ?

## முடிப்புரை

அரிய பெரிய நுட்பங்கள் அமைந்த சிறந்த மொழியும் உயர்ந்த கலையும் உடையராய் வாழ்ந்தனர் நம் முன்னோர். அவர்வழிவந்த நாம் இந்நிலையில் உள்ளோம்! காரணம் என்னை? நம் முன்னோர் போற்றிய மொழியுங் கலையும்

நம்மிடம் உள்ளன. ஆனல், அம்மொழிக்குரிய பற்றுங் கலைக்குரிய உணர்வும் நம்மிடம் இல்லை. மொழிப்பற்றுங் கலையுணர்வும் வளரத்தக்க முயற்சி சிறந்தால் முற்போக்கு உண்டாகலாம். இல்லையானல் என்ன ஆகும்? தமிழர் என்போர் நாகரிகம் இன்றிக் காட்டில் திரிந்து வாழ்ந்து வந்த ஒரு வகுப்பினர் என்று இறந்தகாலத்தவராகக் கருதிப் பொருள்விளக்க அகராதிகளில் எழுதப்படுங் காலம் வரினும் வரும்போலும்! இதனை நினைக்கவும் நெஞ்சு பொறுக்கின்றதில்லை. வருந்திப் பயனில்லை. தமிழ்மக்களின் உறக்கந் தெளிந்தாற் பயன் உளதாகும்.

இந்நாடு இப்போது உள்ள இழிநிலை அறிந்தே இயற்கையும் இதனை வெறுத்தது போலும்! மருதக்கலியுள் காணுந் தமிழ்நாடு, இயற்கையின் அருள்பெற்ற தமிழ்நாடு. அதனை,

"இருநிலந், தார்முற்றி யதுபோலத் தகைபூத்த வையைதன்
நீர்முற்றி மதில்பொரூஉம் பகையல்லால் நேராதார்
போர்முற்றொன் றறியாத புரிசைசூழ் புனலூரன்"

(மருதம்: 2.)

என்னும் அடிகளால் அறிக.

வையை ஆற்றில் நீர் நிரம்பியிருந்ததாம்; அந்நீர் மதுரையின் மதிலை எக்காலத்துந் தாக்கியதாம். இந்தத் தாக்குதலே ஒழிய, பகைவர் படையெடுத்துவந்து போர் முற்றுகையிட்டுத் தாக்குதல் இல்லையாம். இஃது உயர்வு நவிற்சி அன்று. அக்காலத்தே இயற்கை துணை செய்தது; நீர்வளம் பெருகியிருந்தது. இக்காலத்தே நீர் எங்கே? வளம் எங்கே? வையை ஆற்றில் நீரோட்டம் எங்கே? "தைத்திங்கள் தண்கயம் போல" என்று பாராட்டுவது தமிழர் மரபு. தைத்திங்களில் குளங்கள்

எல்லாம் நீர் நிரம்பிக் குறைவின்றி விளங்குமாம்! இக் காலத்திலோ, தைத்திங்களிலும் குளங்களில் நீர் இல்லை என்னுங் குறையே கேட்கின்றோம். ஆதலின், மருதக் கலியிற் காணுந் தமிழ்நாடு இன்று இல்லை. அப்போது நீர் முற்றுகை இருந்தது, போர் முற்றுகை இல்லை என்றார் புலவர். அவர்க்கு நாம் கூறுவது என்னை? இக்காலத்தே நீர் முற்றுகையும் இல்லை; போர் முற்றுகையும் இல்லை என்பதே ஆகும். தமிழ்நாட்டை இயற்கையும் புறக்கணித் தது; பிறநாட்டினருந் தமிழரை மதித்திலர்; ஆதலின் இரண்டும் இல்லையாயின!

மருதக்கலியுள் காணுந் தமிழர் எத்தகையர்? அவர் செவியில் பொல்லாச் சொற்கள் புகவில்லையாம். அச் செவிகளே வயலாக, சான்றோர் செய்யுட்களே நீராக, நாவே ஏராகப் புலவர் உழுதுண்டனராம். அவருடைய மொழிகள் பழங்கதைகளாக — புராணங்களாக—இருக்க வில்லையாம்! புதுமொழிகளாக இருந்தனவாம்! அப்புது மொழிகளை மக்கள் கொள்ளைகொண்டு உண்டனராம்!

“செதுமொழி சீத்த செவிசெறு வாக
முதுமொழி நீராப் புலன்நா உழவர்
புதுமொழி கூட்டுண்ணும் புரிசைசூழ் புனலூர”

(மருதம்: 3.)

மருதக்கலியுள் செறிந்துகிடக்கும் விழுமிய கருத்துக் கள் இவை போன்றவை மிகப் பல. அவை பொன்னே போற் போற்றத்தக்கவை. மொழிப்பற்றுங் கலையுணர்வும் உடைய மக்களிடம் அவர்தந் தாய்மொழியில் இதுபோன்ற நூல் இருப்பின் அதன் புகழ் உலகெங்கும் பரவுமாறு செய்வர்; ஆனால், தமிழ் மக்களிடையே தோன்றிய கலித் தொகை, “கற்றறிந்தார் ஏத்துங் கலி” என்று சில மூலை

முடுக்குகளில்—சில தமிழ்வகுப்புக்களில் மட்டும் பழைய வாய்பாடாகக் கூறப்பட்டு வருகின்றது.

ஆதலின், தமிழன்பர்களே! கலித்தொகையைக் கற்று அறிந்து ஏத்துதல் நமது கடமை. ஆனால், உண்மையை ஆராயுங்கால், தமிழர் கலைநூல்களைக் கற்பதற்கு ஏற்ற காலம் இன்னும் வரவில்லை என்றே தெரிகின்றது. மொழி ஆக்கம் பெற்றாலன்றிக் கலை ஆக்கம் பெறுமோ? இனிய தாய்மொழியாகிய தமிழிலேயே எழுதுதல், பேசுதல், வழக்காடுதல், அரசாளுதல் ஆகிய எல்லாம் நடைபெறும் நாள் வந்தாலன்றி நமது எண்ணம் ஈடேறுமோ?

———

## ௬. நெய்தற் கலி

[இளவழகனார்]

### 1. நெய்தல் நில அமைப்பு

சில ஆண்டுகளுக்குமுன் நான் இடைக்கழி நாட்டுக்கு அடிக்கடி போவதுண்டு. அப்பக்கத்திற் சில ஆண்டுகள் தொடர்பாகவும் இருந்திருக்கிறேன். அந்த நாடு செங்கற் பட்டுக்குத் தெற்கில் முப்பத்தைந்து கல் தொலைவில் இருக்கிறது. பல ஊர்கள் சேர்ந்து, ஒரு தனி நாடுபோல இப்பொழுதுங் காணப்படுகிறது. இந்த நாட்டின் வடக்குப் பக்கத்திலும் தெற்குப் பக்கத்திலும் உப்பங்கழிகள் உண்டு. இவற்றினிடையில் இந் நாடு கடற்கரையோரமாய் அமைந் திருக்கிறது. இதன் இடையேயும் அகன்ற கழியொன்று செல்லுகிறது. இந்நாடு முழுமையும் ஒரே மணல்; முழு மையும் தென்னை, மா, பலா, வாழை, முந்திரி முதலான மரங்கள் வளர்ந்து ஒரே சோலையாயிருக்கும். புன்னை, தாழை முதலான மரங்களும் ஒதுக்கிடங்களில் இருக்கும். வீடுகள் தோட்டத்துக் கொன்றாய்க் காணப்படும். இடை யிடையே தெளிந்த நீர்ச் சுனைகளும் உண்டு.

நினைத்தபோதெல்லாம் அங்கே சென்று தங்கி, அந்தக் கடலையும் கானலையும் கழியையுங் கண்டு கண்டு இன்புற் றுப், பசியெடுத்தபோது அங்கே கிடைக்கும் இளநீர், பனை நுங்கு, பலா முதலிய பழங்கள் சில அருந்திச் சுனைநீரும் பருகிப் பின் திரும்புவதுண்டு. தமிழ் பயிலும் அன்பர் சிலரும் பிறரும் அவ்வப்போதும் உடன்வருவர். எனக்கு ஆரா இன்பமாயிருக்கும். மற்றவர்களுக்கும் அப்படியே. மாலை நேரத்தில், இடையே செல்லுங் கழியூடு, எல்லோரும் படகில் ஏறி, ஒரு கல் ஒன்றரைக் கல் தொலைவுவரையிற் போய்த் திரும்புவோம். அப்போது அந்தக் கடற் காட்சி

யுங் கானற் காட்சியும் பிறவும் எங்களுக்கு அளிக்கும் இன்பம் சொல்லி அமையக்கூடியதன்று. அன்பான் அமைந்த எங்கள் உரையாடல் இன்னும் அவ்வின்பத்தைப் பலமடங்கு பெருக்கும். செயற்கை முயற்சிகள் பெரிதும் அமையாத இயற்கைக் கானலாதலின், அவ்விடமும் அக் காலமும் அங்குள்ள பொருள்களும் எங்களுக்கு அவற்றிற் கேற்றதோர் உருகிய நினைவை நன்றாய் உருவாக்கிவிடும்.

இடைக்கழி நாட்டின் பெரும்பாகம், குறுநில மன்னர்க்கு உரியது. அவர்களும் அங்கே வந்து தங்கி அந்தக் கடற்கரைச் சோலை தரும் இன்பத்தில் திளைப்ப துண்டு. சந்திக்க நேருங் காலங்களில், அவர்களோடு அந் நாட்டின் இன்பத் திறங்கள்பற்றியும் நான் அளவளாவி மகிழ்வதுண்டு.

ஒருநாள் ஒரு குறுநில மன்னரும் நானும் வீட்டி லிருந்தே புறப்பட்டோம். நண்பர் சிலரும் உடன் வந்தனர். ஊர்தி, கழியருகில் வந்ததும், நின்றது. படகுக்காரன் ஆயத்தமாயிருந்தான். எல்லோரும் படகில் ஏறிக் கொண்டோம். கழிக்கு அக்கரையில் அவர் ஆட்சிக்கு உட்பட்ட ஊர் நல்ல தோற்றத்துடன் விளங்குகிறது. கரையைக் கடந்து சில தோட்டங்கள் சென்றால் அவர் தங்குமாளிகை காணப்படும். அன்றிரா அங்கே தங்கி மறுநாள் திரும்பும் ஏற்பாட்டிற் போனோம். படகு நீர் மேல் மிதந்து மெத்தெனச் சென்றது. அன்று மதிய நாள். அப்போது கதிரவன் மறைந்து மதியம் எழுகின்ற நேரமாயிருந்தது.

உடன் வந்த குறுநில மன்னர் தமிழன்பர்; கொடை யாளி. பரம்பரையாகவே அவர்கள் குடும்பம் தமிழன்பிற் சிறந்து விளங்குவது. முன்னோர் கையாண்ட நூல்கள் அவர் இல்லத்தில் ஒரு நூல் நிலையமாய் விளங்குகின்றன.

ஆதலால் நேரம் வாய்க்கும்போதெல்லாம், தமிழிலக்கியங்களைப்பற்றிப் பேசி மகிழ அவரும் விரும்புவார்; எந்த நேரத்துக்கும் எந்த இடத்துக்கும் ஏற்ற இலக்கியப் பாட்டுகள் தமிழில் இருக்கும் என்பதும், அவற்றுள்ளும் பழைய சங்க இலக்கியப் பாட்டுகள் இயற்கையமைப்புகளை எழுதிக் காட்டுதலில் தலைசிறந்தவை யென்பதும் அவருக்குத் தெரியும். படகு நடுக்கழியில் போய்க்கொண்டிருக்கிறது. கழியின் அழகைப்பற்றிப் பேசிக்கொண்டு வந்தோம். அப்போது அவர் என்னைப் பார்த்து, 'இந்த இடத்துக்கும் இந்த நேரத்துக்கும் ஏற்ற பாட்டொன்று நீங்கள் சங்க இலக்கியங்களிலிருந்து எடுத்துச் சொல்ல வேண்டும்' என்று விருப்பத்தோடு கேட்டார்.

## 2. நெய்தல் அழகு

இடம், கடலும் கடல்சேர்ந்த கானலிடமுமா யிருக்கின்றது. இந்த இடத்தை 'நெய்தல்' நிலமென்று ஆசிரியர்கள் வழங்குகிறார்கள். இன்பச் சுவை என்றால் உடனே கலித்தொகை நினைவுக்கு வருகிறது. ஆகவே, என் நெஞ்சம் உடனே கலித்தொகையில் ஒரு பாகமாயுள்ள நெய்தற் கலியிற் சென்றது. கழியிடத்தைப்பற்றிய ஒரு பாட்டு அப்போது எனக்கு நினைவுக்கு வந்தது.

"ஒண்சுடர் கல்சேர, உலகு ஊருந் தகையது
தெண்கடல் அழுவத்துத் திரைநீக்கா எழுதரூஉம்
தண்கதிர் மதியத் தணிநிலா நிறைத்தரப்,
புள்ளினம் இரைமாந்திப் புகல்சேர, ஒலிஆன்று
வள்இதழ் கூம்பிய மணிமருள் இருங்கழி
பள்ளிபுக் கதுபோலும் பரப்புநீர்த் தண்சேர்ப்ப!

(செ. ௬: க-௬)

என்று அதனை எடுத்துச் சொன்னேன்; சொல்லி,

'ஒளி பொருந்திய ஞாயிறு இதோ மேற்குமலையிற் சேர்கின்றது; உலகமெல்லாம் தன் ஒளிபரக்கும் தன்மையதாய் இதோ தெளிந்த கடற்பரப்பில் அதன் திரையை நீக்கிக்கொண்டு குளிர்ந்த கதிர்களையுடைய முழுநிலா எழுந்து, தன் அழகிய ஒளியை நிரப்புகின்றது. பலவகையான பறவைக்கூட்டங்கள் தத்தம் இரைகளை அருந்திப் பசியாறி, அதோ தத்தம் இருப்பிடங்களைச் சேர்கின்றன. இப்போது இக்கழியில் ஆரவாரமெல்லாம் அடங்கிவிட்டது போலத் தோன்றுகின்றது. பகலின் ஒளி மங்கிவிட்டமையால், இந்தக் கழியிலுள்ள வளமான குவிந்த நீலமலர்களும் இதழின் பிரிவு தெரியாமல் மொத்தமாய்க் குண்டு குண்டாய்த் தெரிதலால், ஒவ்வொன்றும் ஒவ்வொரு நீலமணியேயென்று மற்றவர்கள் மருண்டு எண்ணுவதற்கு இடமாயிருக்கிறது. இங்ஙனம் ஆரவாரம் அடங்கி இருளிற் காணப்படுவதனால் இந்தப் பெரிய கழி உறக்கத்திற் புகுந்திருக்கின்றது என்று சொல்லலாம். நீங்களும், இப்படிப்பட்ட பரப்பு நீரான கடலை இடமாக உடைய குளிர்ந்த கானல் ஊரினராய் விளங்குகிறீர்கள்' என்று அதன் பொருளையும் விரித்துச் சொன்னேன்.

பக்கத்தில் இருந்தவரில் ஒருவர், 'இந்தப் பாட்டு இப்போதைக்கு முழுதும் பொருத்தமாயிருக்கிறது. ஏனென்றால், நம் குறுநில மன்னர் இக் கடற்கரை ஊர்களுக்குத் தலைவராய் இருத்தலால், 'பரப்புநீர்த் தண்சேர்ப்ப' என்று இவரையும் அழைப்பது முற்றும் பொருந்தும். கடற்கரை ஊரின் தலைவற்குச் 'சேர்ப்பன்' என்பது பெயரன்றோ?' என்றார்.

இன்னொருவர், 'முற்றும் பொருந்துந்தான்; இப்போது இவர் இனிய முகத்துடன் குளிர்ச்சியாகவன்றோ இருக்கிறார். ஆகவே, பாட்டில் 'தண் சேர்ப்ப' என்று

வருகின்றது; 'குளிர்ச்சியான சேர்ப்பனே' என்பது தானே அதன் பொருள்!' என்று கிளர்ச்சியோடு சொன்னார்.

'ஆம், குளிர்ச்சி கரைக்கும் பொருந்தும்; அந்தக் கரையையுடைய தலைவனுக்கும் பொருந்தும்; இரண்டுக்கும் ஒப்ப இரட்டுறப் பொருள் கொள்ளும்படி அமைந்திருப்ப தாகவே கொள்ளலாம்' என்று எல்லாருந் தீர்மானித் தார்கள்.

'அப்படியே இருக்கட்டும்' என்று சொல்லி அக் குறுநில மன்னர் அவர்களை அமர்த்திப், 'பாட்டு எவ்வளவு இயற்கையா யிருக்கிறது. நாம் இந்தக் கழியைப் பார்க்கும் போது இப்படித் தோன்றவில்லை; அந்தப் பாட்டைக் கேட்டபிறகு எல்லாம் அப்படியே தோன்றுகின்றன. ஊன்றிப் பார்க்கும்போதுதான் தெரிகிறது. வேற்றிடங் களிலிருப்பவர்கள் இப் பாட்டைக் கேட்டாலும், இக் கழி யின் தோற்றங்கள் அவர்களுக்கு நேரிற் பார்ப்பது போலவே தோன்றும் என்பதில் ஐயமில்லை. பொய் ஒன்றுமில்லாமல் இயற்கையில் உள்ளபடியே இந்தப் பாட்டு அமைந்திருக்கின்றது. இதை மெய்யாகவே, இயல்பான சாயங்கள் தீட்டி ஒரு படமாகவும் எழுதலாம்' என்றார்.

'சங்க இலக்கியங்களிற் பத்துப் பாட்டும், எட்டுத் தொகை நூல்களும் அதற்குப் பெரிதும் பயன்படும். சில பாட்டுக்கள் தவிர மற்ற எல்லாப் பாட்டுகளையும் இப் படியே தனித்தனியான படங்களாய் எழுதிவிடலாம். பதினெண்கீழ்க் கணக்கு நூல்கள் சிலவற்றிலும் சில இடங்கள் பயன்படும்; எட்டுத் தொகையைச் சேர்ந்த இக் கலித்தொகையில் நல்ல நல்ல இடங்களெல்லாம் இருக்கின் றன. இயன்றவற்றைத் தனித்தனிப் படங்களாக எழுதி ஒரு தனி மாளிகையில் அணிபெற வைத்தால், சங்க

இலக்கியங்கள் கற்றலில் எல்லார்க்குமே ஒரு நல்ல உணர்ச்சி உண்டாகும்; அவற்றின் பெருமையுந் தோன்றும். அப்போது அந்த மாளிகையே ஒரு தமிழ் மாளிகையாய்த், தமிழ்த்தேவியின் திருவோலக்க மண்டபமாய்த் திகழும். ஓவியங்களின் அடியிற், பாட்டுகளின் பகுதிகள், அவை வந்த நூல்களின் பெயருடன் அமைத்துவிடலாம்' என்று இப்படி எல்லோருங் கலந்து பேசிக்கொண்டோம்.

எங்களுடன் வந்தவர்களில் இரண்டுபேர் நன்றாய் இசை பாடக்கூடியவர்கள். ஒருவர், இந்தப் பாட்டை நல்ல இன்னிசையிற் குழைத்து ஆளத்திமுறையிற் பாடும்படி கேட்டுக்கொள்ளப்பட்டார். அவர் பாடியபின்: மற்றொருவரும் வேறோரின்னிசையிற் பொருத்தி அதனைப் பாடவேண்டுமென்று வேண்டிக்கொள்ளப்பட்டார். ஒரு துண்டுச் சீட்டில் நான் பாட்டை எழுதிக்கொடுத்தேன். கையிலிருந்த ஒரு மின்விளக்கின் உதவியால் நண்பர்கள் இருவரும் அதனைப் பாடத் தொடங்கினர். குறுநில மன்னர் மிகக் கிளர்ச்சி யுடையவரானார்.

இதற்குள் படகு, கரையின் அருகில் வரவிருந்தது; ஆனால், இந்த இன்ப நிலையை அவர் மாற்றிக்கொள்ள விரும்பவில்லை. படகைத் திருப்பிக் கடலின்முகமாகச் சிறிதுதொலைவு விடுமாறு படகோட்டிக்குச் சொன்னார். எல்லார்க்கும் மகிழ்ச்சியாகவே இருந்தது.

இசை நண்பர்கள் இருவரும் நன்றாய் மாறி மாறிப் பாடிப் பேரின்பம் விளைத்தனர். அச் செயல் எல்லாரையும் பாட்டின் பொருளிலும் அதனை எழுதியவர் திறத்திலுங் கருத்தூன்றிப் படியுமாறு செய்துவிட்டது.

இப்போது நிலவு, எங்கட்கு எதிரே, கடலிலிருந்து எழுந்துவருந் தோற்றம் நன்றாய்த் தெரிந்தது. அந்த அழகு, பாட்டில், 'தெளிந்த கடற்பரப்பில் திரையை

நீக்கிக்கொண்டு எழுந்து வருவதாக' உரைத்திருப்பது, உணர்ச்சியை எவ்வளவு கவ்வக்கூடியதாயிருக்கிறது என்று எல்லாரும் சொல்லிக்கொண்டு மகிழ்ந்தோம். இந்தப் பாட்டில், இன்னும் ஏதாவது நயங்கள் இருக்கின்றனவா ? என்று என்னை அவர்கள் கேட்டார்கள்.

## 3. உள்ளுறையான கருத்துக்கள்

நான், "நயங்கள் இருக்கின்றன ; செய்யுள் அமைப்பி லேயே ஒன்று குறிப்பிடுவது முதன்மையானது; அது : காலத்துக்கேற்றபடி இடத்தின் அமைப்புகளை அழகுற எடுத்துச் சொல்லும்போதே, சொல்லுவோர், தாம் உள் ளத்திற் கொண்டிருக்கும் வேறு கருத்துக்களும் அப் போது குறிப்பாய்ப் புலப்படும்படி, அவற்றை அமைத்துச் சொல்லிவிடுவதுண்டு. பாட்டை மேலோடு பார்த்தால் ஏதோ நிலத்தின் இயற்கையைக் கூறியதுபோல இருக்கும்; ஊன்றிப் பார்த்தால் வேறு குறிப்பான கருத்துக்களும் அதன் அடியில் விளங்கிக்கொண்டிருக்கும். இந்தப் பாட் டில் விளங்கிக்கொண்டிருக்குங் குறிப்பான கருத்து இது:

கடற்கரை ஊர்க்கு உரியோன் ஒருவன், அங்கே ஒருத்தியைக் கண்டு காதலிக்க, இருவருங் களவில் ஒழுகி வந்தார்கள். ஊரில் அலர் உண்டாயிற்று. இது தணிய வேண்டி அத் தலைவன் சில நாட்கள் அங்கே வராமல் தன் இல்லத்திலேயே போய்த் தங்கியிருந்தான். அந்தப் பெண் ணுக்குக் காவல்கள் வைக்கப்பட்டன. அப் பெண்ணை எல்லாரும் மருண்டு மருண்டு பார்த்துக்கொண்டிருந்தார் கள். பழிச் சொற்கள் சொன்ன அயல் மாதர்களின் ஆர வாரம் இப்போது அடங்கி ஊர் அமைதியாய் இருந்தது.

இப்படியே எத்தனை நாளைக்குப் பிரிந்திருப்பது? அந் தப் பெண்ணின் தோழி அத் தலைமகனை எதிர்ப்பட்டு,

உடனே திருமணம் செய்துகொள்வதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும் என்று சொல்லுகிறாள். அப்படிச் சொல்லு முன் தலைவியின் நிலை, ஊரின் நிலை முதலியன எப்படி இருக்கின்றன என்று தலைவன் அறிய விரும்புவான். ஆகவே, அக் கருத்துக்களையுந் தோழி புலப்படுத்த வேண்டும்; அவற்றையே குறிப்பாக இந்தப் பாட்டில் உணர வைக்கிறாள். உணரவைக்கும் வகை இது :

ஒளிகொடுத்துக்கொண்டிருந்த சூரியன் மேற்கு மலையிற் போய் மறைந்தான் என்பதனால், தலைவிக்கு இன்பங் கொடுத்துக்கொண்டிருந்த தலைமகன் இப்போது தன் ஊரில் வந்து மறைந்துகொண்டான் என்பதும்; முழுநிலா விளக்கமாய் எழுந்தது என்பதனால், இல்லத்தில் காவல்கள் முழு அளவில் விளக்கமாய் விழித்துக்கொண்டிருக்கின்றன என்பதும்; பறவையினங்கள் ஆரவாரம் அடங்கித் தத்தம் கூடுகளிற் புகுந்தன என்பதனால், அயல் மாதர்களின் பழிச் சொற்கள் அடங்கி அவர்கள் தத்தம் இல்லத்தில் அமைந்திருக்கின்றனர் என்பதும்; நீல மலர்களை நீல மணிகள் என்று மருள்கின்றனர் என்பதனால், தலைவியை இல்லத்திலுள்ளவர்கள் மருண்டு மருண்டு பார்க்கின்றனர் என்பதும்; கழி உறக்கத்திற் புகுந்ததுபோ லிருக்கின்றது என்பதனால், ஊர் அமைதியாயிருக்கின்றது என்பதும், குளிர்ந்த சேர்ப்பனே என்பதனால், தலைவன் ஏதும் அறியாதவனைப்போல இனிமையாயிருக்கிறான் என்பதும் புலப்படும். இதனைக் குறிப்பாய்த் தெரிந்துகொள்ளும் படி, அவள், நிலத்தினியற்கையைப் புனைந்து சொல்லுவது போல இந்தப் பாட்டு இயற்றப்பட்டிருக்கின்றது.

இதன்கண், மற்றொன்றும் அவள் விழிப்பாய்க் குறிப் பித்திருக்கிறாள். காவல் முழு அளவில் விளக்கமாயிருக் கின்றதென்பதனால், அத்தலைவன் மீண்டும் மீண்டும் களவில்

ஒழுகுவதற்கு வழியில்லை என்பதும், உடனே திருமணத்துக்கு ஏற்பாடு செய்வதுதான் நல்லது என்பதும் அவனுக்குத் தோன்றுமல்லவா?

இப்படி இந்தப் பாட்டில் வேறு கருத்துக்களும் இதன் அடிப்படையில் உறைந்துகொண்டிருக்கின்றன. வெளிப்படையாய்த் தோன்றுங் கருத்துக்கள், உள்ளே அடிப்படையாய் உறையுங் கருத்துக்களுக்கு உவமையாய் வருவதனால், இப்படிவரும் உவமைகள் 'உள்ளுறையுவமம்' என்று சொல்லப்படுகின்றன. இப்படிக் கலித்தொகையிலும் வேறு அகப்பொருள் நூல்களிலும் பல பாட்டுக்கள் கருத்து நிறைவோடு வருகின்றன. உட்கருத்து மேற்கருத்து என்னும் இரண்டுக்கும் ஒப்பச் சொற்களும் பொருந்திய பொருட்சிறப்புடன் அமைந்திருக்கும்.

இந்தப் பாட்டில், 'ஒண்சுடர்' என்று முதலில் வந்த சொல்லே இதற்குப் போதிய சான்று. 'ஒள்ளிய ஞாயிறு' என்பது அதன் பொருள்; 'உலகுக்கு ஒளியைக் கொடுத்துக் கொண்டிருந்த ஞாயிறு' என்பது அதன் கருத்து. 'தலைவியின் அழகுக்கு ஓர் ஒளி கொடுத்துக்கொண்டிருந்த தலைவன்' என்பது அதன் உள்ளுறை பொருள். இரண்டு கருத்துக்களுக்கும் எவ்வளவு பொருத்தமாய் அச்சொல் அமைந்திருக்கின்றது! இப்படிப் பலவகையான நயங்கள் இத்தகைய பாட்டுக்களில் உண்டு. கற்போருக்கு அவை மேலுமேலுங் கழிபேருவகை தரும்'' என்று சொல்லி அவ்வளவோடு நிறுத்தினேன்.

கேட்டுக்கொண்டு வந்தவர்களின் வியப்பும் இன்பமும் சொல்லத்தரமில்லை. குறுநிலமன்னர் விம்மிதமெய்திப் போனார். என்னை நோக்கி ஏதோ சொல்ல விரும்புகிறார் என்று தோன்றிற்று. 'இவை அழகாயிருக்கின்றன; இன்

னும் இரண்டோருவமங்கள் நீங்கள் சொல்லவேண்டும்; இப்படியே கருத்துகள் மட்டும் சொன்னாலும் போதும்' என்று அவர் சொன்னார். அவர் சொன்னது ஏதோ என்னிடம் குறையிரப்பதுபோலத் தோன்றிற்று. அதனால் இத்தகைய கருத்துக்களில் அவர்க்கிருக்கும் ஆர்வம் நன்கு புலப்பட்டது. மற்றவர்களும் ஆர்வமாயிருக்கிறார்களென்று தெரிந்தது. நினைவுக்கு வந்த சிலவற்றைச் சொன்னேன்.

களவில் ஒழுகும் ஒரு தலைவனை, 'முள்ளுள்ள கழி முள்ளி மரங்களும் கொடிய தில்லை மரங்களும் சூழ்ந்த கானற் காட்டில், தாழைமரத்தின்மேல் அதன் மலர்தான் மலர்ந்திருக்கின்றது என்று மற்றவர்கள் நினைக்கும்படி நாரைகள் தங்கியிருக்கும் இடத்தை யுடையவனே' (செய்-க- கசு) என்று தோழி சொல்லுகிறாள். இதனுள் கொடிய மரங்கள் சூழ்ந்திருக்கும் கானற்காடு என்பது, நீ களவில் ஒழுகுவதனால் இந்த ஊர் அலர் தூற்றுங் கொடிய மகளிர்கள் சூழ்ந்திருக்குங் காடாயிருக்கின்றது என்னும் உட்கருத்தையும், மீன் முதலியவற்றை வருத்துந் தொழிலுள்ள நாரை, தொலைவிலிருந்து பார்ப்பவர்களுக்குத் தாழம்பூவே என்று தோன்றும்படி அத்தாழைமரத்தின் மேல் அமர்ந்திருக்கின்றதென்பது, தலைவியை விரைவாய் மணந்துகொள்ளாமல் அடிக்கடி பிரிந்து பிரிந்து மறைவில் வருத்துந் தொழிலுள்ள நீ, பார்ப்பவர்களுக்குமட்டும் நல்லவன்போல் இங்கே தங்கியிருக்கின்றாய் என்னும் உள்ளுறையையும் விளக்கிக்கொண்டிருக்கின்றன.

மற்றொரு நேரத்தில் தோழி தலைவனை நோக்கிப், 'புன்னை, சுரபுன்னை, தாழை, செருந்தி முதலான மணங் கமழ் மலர்கள் கீழே மாலைபோல் வீழ்ந்து மணக்கின்ற கானலையுடையவனே' என்கின்றாள். (செய் - க௦; கடு)

'கடலின் புலால் நாற்றம் தீர இம்மலர்கள் மணல்மேல் விழுந்து மணக்கின்றன. ஆனால், கடல் அதனை அறிந்து கொள்ளாமலிருக்கிறது; அதுபோலத் தலைவி, தலைமகன் வருத்தந் தீர, அவன் தங்கியிருக்கும் இடத்துக்கு வந்து அவனுக்கு இன்பந்தருகின்றாள். அதன் அருமையை அவன் அறிந்துகொள்ளாமலிருக்கின்றான்' என்பது இதன் கருத்து.

## 4. நெய்தலில் வரும் ஊசல்

இப்போது வேறொரு நல்ல பாட்டு நினைவுக்கு வருகின்றது. பாட்டையே சொல்லிப் பொருள் விளக்கினால் நல்லதுதான். இருந்தாலும், பாட்டுப் பெரிதாயிருப்பதனால் கருத்தைமட்டும் சுருக்கமாகச் சொல்லுகிறேன்.

களவில் ஒழுகுந் தலைமகளும் அவளுக்குத் துணை செய்துவரும் தோழியும் ஒருநாள் ஓர் உத்தி செய்தார்கள். தலைவன் விரைவில் மணந்துகொள்ளவில்லை என்பது அவர்களுக்கு வருத்தம். தோழி சொன்னாள்: 'நாம் இன்று கானற்சோலைக்குப் போவோம். போய், அங்கே சுறா மீன்களின் கொம்புகளைச் சீவியடுக்கிக் கோத்த பலகையைத் தாழையின் விழுதுகள்கொண்டு அத்தாழை மரத்திலேயே தொங்கும்படி கட்டி ஓர் ஊசல் அமைத்துக்கொள்வோம். நெய்தல் மலர்களை நாரில் தொடுத்து அந்த ஊசல் தொங்கும் விழுதுகள் நெடுகச் சுற்றி அழகு செய்வோம். நீ ஊசலில் உட்கார்ந்துகொள்; நான் ஆட்டுகிறேன். நம் தலைவன் திறங்களைப்பற்றிச் சில ஊசற்பாட்டுகளும் நான் பாடுவேன்; நான் கேட்டுக்கொள்ளுகிறபடி நீயும் சில பாட வேண்டும்; நமது பாட்டுக்குப் பக்க வாச்சியமாக வண்டுகளும் யாழ்மீட்டும்; அதன்மேல் நடக்கவேண்டியவைகளை நான் பார்த்துக்கொள்ளுகிறேன்' என்று.

எப்படியோ, தலைவன் விரைவில் தன்னை மணந்து கொண்டாற் போதும் என்பது தலைவியின் எண்ணம். அப்படியே செய்ய ஒப்புக்கொண்டாள்..

கருதியபடியே இருவரும் சோலைக்குச் சென்று ஊசல் அமைத்துக்கொண்டார்கள். கடற்காற்றும் கானற்காற்றுங் கலந்து தண்ணென வீசின. தோழி ஆட்டத், தலைவி மிக இன்பமாய் ஆடிக்கொண்டிருக்கிறாள். அப்போது அங்கே வந்த தலைவன், தொலைவிலேயே இவர்கள் நிகழ்ச்சியைப் பார்த்து உள்ளமும் உடம்பும் பூரித்தவனாய் அருகில் ஒரு பக்கத்தில் வந்து மறைந்துகொள்கிறான். தலைவன்மேல் குறைகள் சுமத்தி ஒரு பாட்டுப் பாடும்படி தோழி தலைவிக்குக் குறிப்பித்தாள். தலைவிக்கு அவன்மேல் குற்றங்கள் சுமத்திப் பாட மனம் வரவில்லை. அதனால் அவள் பாடவில்லை. பின், தோழியே முதலிற் பாடினாள். அதன் கருத்து,

'நம் தலைவன் இருக்குந் துறையிடத்திலுள்ள நண்டுகள் நம்மைக் கண்டு தம் வளைக்குள் போய்ப் புகுந்து கொள்கின்றன. தலைவன் நமக்குச் செய்யுங் கொடுமைகளால் நாம் வருந்தும் வருத்தத்தைப் பார்க்க அந்நண்டுகளுக்கும் மனம் பொறுக்கக்கூடவில்லை. நாணுகின்றன; இரவெல்லாம் இப்படி நாணுகின்றன' என்பது.

இங்ஙனம் தோழி பாடியதைக்கேட்ட பின்னும், தலைவி பாடவில்லை; அதுகண்ட தோழி, தலைவியை நோக்கி, 'உடனே மணஞ்செய்துகொள்ளாமல் தலைவன் உன்னை எவ்வளவு கொடுமைப்படுத்துகிறான்? அக்கொடுமையின் கடுமையைச் சொல்லி நீ ஓர் ஊசற்பாட்டுப் பாடு' என்றாள்; தலைவிக்கு அப்போதும் அங்ஙனமொன்று பாட அவள் அன்பார்ந்த மனம் இடங்கொடுக்கவில்லை. தலைவி பேசாமலிருக்கவே, தோழி, நாமே மீண்டுமொன்று பாடுவோம்; அப்புறம் தலைவி பாடக்கூடும் என்று கருதி,

'நம்மை இங்ஙனம் மெலிவித்தவனுடைய துறையிடங் களில் துணையோடு கூடியிருக்கும் அன்றில் பறவைகளும் மகிழ்ச்சியால் ஆரவாரிப்பதில்லை. நமது வருத்தங் கண்டு அவைகளும் வருத்தப்படுகின்றன. இரவெல்லாம் இப்படி வருத்தப்படுகின்றன' என்னுங் கருத்தமைத்து மற்றொன்று பாடினாள்.

தன் தலைவன்மேல் தோழி இங்ஙனங் குற்றங் காட்டியே பாடுவது தலைவிக்கு இசைவாயில்லை; ஆகவே அவள், 'தோழீ, நம் தலைவனது துறையிடத்தில், இயல்பாய் இறந்துபோன மீன்களையே பறவைகள் உண்ணுகின்றன; அவை, தமக்கு இரை வேண்டுமென்று ஓர் உயிரையுங் கொல்லுவதில்லை. அப்படிப்பட்ட அருட்டுறையையுடையவன் நம் தலைவன்; அவன்மேல் நீ குற்றஞ் சுமத்திப் பாடுவதை விடுத்து அவன் நற்குணங்களையெல்லாம் எடுத்து ஏத்திப் பாடு; இந்த இன்ப விளையாட்டில் நமது ஊசற் பாட்டு அப்படி அமைவதுதான் நல்லது' என்று சொன்னாள். ஆனால் தோழிக்கு இது கருத்தன்று; ஆதலால் அவள் பாடவில்லை. அதுகண்ட தலைவி, தானே அங்ஙனமொன்று இனிதாகப் பாடினாள். அந்த அழகிய பாட்டு இது:

"அருளினகொல் தோழி! அருளினகொல் தோழி!
இரவெல்லாம் தோழி! அருளின என்பவை,
கணங்கொல் இடுமணல் காவி வருந்தப்
பிணங்குஇரு மோட்ட திரைவந் தளிக்கும்
மணங்கமழ் ஐம்பாலார் ஊடலை ஆங்கே
வணங்கி உணர்ப்பான் துறை"

இதன் கருத்து 'தோழீ, மகளிர் ஊடலை' அப்பொழுதே வணங்கிவந்து தீர்ப்பவன் அவன்; அவன் துறையிடம் நீ

சொன்னதுபோலெல்லாம் இல்லை. அங்கே மணலிடத்திற் காற்றில் அகப்பட்டுக்கொண்டு கருங்குவளை மலர்கள் வருந்த, அவற்றிற்கு அருள்கூர்ந்து, நீர் அலைகள் அவ்வப் போதும் வந்து, அவற்றின் மேலே படும் மணலைக் கரைத்து அருள் பண்ணும். இரவெல்லாங்கூட இப்படிச் செய்யும். இப்படிப்பட்ட துறையன்றோ அவனது துறை' என்பது.

'கழியிடத்து மணலில் குவளைமலர் அகப்பட்டுக் கொண்டது; அதுபோலக் கானற் சோலையில் தலைவி களவொழுக்கத்தில் ஒழுக நேர்ந்துவிட்டது. சுழல் காற்று அம் மலரின்மேல் நாற்புறமும் சுடுமணலைத் தூற்றி வீசி அதனைப் புரட்டிப் புரட்டி அலைத்தது; இங்கே தலைவிக்கும் அலர் தோன்றி நாலாபக்கங்களிலிருந்தும் சுடுசொற்கள் வந்து தூற்றி அவளை வருத்தி வருத்தி அலைத்தது. முடிவில், நீர் அலை அம் மலரின்மேல் வந்து விழுந்து, மணலைக் கரைத்து, வாடிய மலரைக் குளிர்வித்தது. அங்ஙனமே அன்பார்ந்த தலைவனும் தலைவியினிடம் வந்து அவளை விரைவில் மணந்துகொண்டு அவள்மேல் ஊரார் வீசிய சுடுசொற் களைப் போக்கி, வருந்திய அவளை மகிழ்விப்பான்' என்பது தலைவி பாடிய இப்பாட்டின் உள்ளுறை பொருள்.

தோழியும் தலைவியும் இங்ஙனம் தன்னைப்பற்றி மாறி மாறிப் பேசிப் பாடி ஆடிக்கொண்டிருப்பதைக் கேட்டும் பார்த்தும், மறைவிலிருந்த தலைவன் உள்ளுக்குள் மிக மகிழ்ந்தான். தன்னிடம் தலைவி வைத்திருக்கும் பேரன்பை யும் பெரு நம்பிக்கையையும் உணர்ந்து உடனே அவளை மணந்துகொள்வதற்கு ஏற்பாடு செய்யவேண்டுமென்று எண்ணினன். தன்மேல் இவ்வளவு அன்பு வைத்திருக்கும் தலைவியின் ஊசலைத், தானே சிறிது ஆட்டவேண்டுமென் றும் நினைத்தான். ஆகவே, பின்பக்கமாய்ப் பைய வெளியே வந்து தோழிக்குக் குறிப்புக் காட்ட, அவள் திடுக்கிட்டுச்

சற்று விலகி நின்ருள். தலைவன் தோழி நிற்பதுபோலவே நின்று, தலைவியின் ஊசலை ஊக்கினன்: தலைவியும் சிறிது நேரம் வரையில், தோழியே தன் ஊசலை ஊக்குகின்ருளென்று நினைத்திருந்தாள். எத்தனைநேரம் அப்படித் தெரியாமலிருக்கக்கூடும்? உண்மை தெரிந்தது; ஆ, தலைவியின் முகத்தில் அப்போது மின்னலைப்போலச் சடுதியில் மாறி மாறித் தோன்றிய, ஏமாற்றம் அச்சம் வியப்பு இன்பம் நாணம் முதலிய இயல்புகளின் விளக்கத்தையும் விரைவையும்பற்றி யாரே எடுத்துரைக்கவல்லார்?

என்று இங்ஙனம் வருகின்ற இப்பாட்டின்கண்ணும், உள்ளுறையுவமம் வருகின்றது என்று சொன்னேன். சொல்லி, இன்னும் சொல்லுவேன்; நேரமாய்விடும்' என்றேன்.

சூழ இருந்தவர்கள், 'நாங்கள் இன்னுங் கேட்போம்; இரவெல்லாங் கேட்போம். நெய்தற்கலியின் பாட்டுகள் அறிவுக்கு விருந்தாகவே இருக்கின்றன. வெறுங் கதைகளையே கேட்டு உலகம் காலங் கழிக்கின்றது. இப்படிப்பட்ட அறிவுத் துணுக்குகள் எவ்வளவு இன்பமாயிருக்கின்றன' என்ருர்கள். அவர்கள் எழுச்சியைக் கண்டு, 'இந்த ஊசற் காட்சியும் நிகழ்ச்சியும் ஒரு படக்காட்சி போலவே இருக்கின்றதன்ருே' என்று சொன்னேன்.

அதுகேட்ட குறுநில மன்னர், 'படக்காட்சிகளுக்கு இதுபோன்ற நிகழ்ச்சிகள் பெரிதும் பயன்படக்கூடும்; இந்த வகையிற் பழைய சங்க இலக்கியங்களில் நிரம்பக் கருத்துகள் கிடைக்குமென்று நம்புகிறேன்; தமிழறிஞர்களும் படமெடுக்கும் முதலாளிகளுங் கலந்து கொள்வது நல்லது' என்று தங் கருத்தையும் விருப்பத்தையும் வெளிப்படுத்தினுர்.

எங்கள் படகு கடலருகில் வந்துவிட்டது. கழியின் தோற்றமும் கடற்கரையின் தோற்றமும் கழியின் இரு மருங்குமுள்ள கானற்சோலைகளின் தோற்றமும் அந்த முழு நிலவிலும் மென்காற்றிலும் பேரின்பமாய்த் திகழ்ந்தன.

## 5. கடல் பாட்டு

கழியைப்பற்றி முன் ஒரு பாட்டுச் சொன்னமையால் இப்போது கடலைப்பற்றி ஏதேனுஞ் சொல்லவேண்டு மென்று அன்பர்கள் கேட்கக்கூடுமென்று எண்ணினேன். எதிர்பார்த்தபடியே ஆயிற்று; 'அதற்கென்ன, அப்படியே சொல்லுகிறேன்; கழியின் உறக்கத்தைப்பற்றிச் சொன்னது போலவே, கடலும் உறங்குவதுபோலச் சொல்ல வேண்டுமானாலுஞ் சொல்லுகிறேன். பாட்டுக்கள் களஞ்சியம்போல இருக்கின்றன' என்று சொல்லித்,

'திருமால் கடலில் அமர்ந்து அறிதுயிலில் உறங்குகிறார் என்று சொல்லுகிறார்கள்; அப்போது பலர் பாடுவார்களாம்; பலர் யாழ் இசைப்பார்களாம். இவற்றைக் கேட்டுக்கொண்டு உறங்கும்போது திருமாலின் உறக்கம் எவ்வளவோ இனிமையாகத்தான் இருக்கும். திருமால் உறங்கும்போது கடலும் நேரமறிந்து உறங்குகிறது. அறிதுயிலில் உறங்கும் உறக்கம், வெறும் அறியாமை உறக்கமன்று; அந்த உறக்கத்தில் அறிவு அலைவீசிக்கொண்டேயிருக்கும் ஆகவே, கடலும் அலைவீசிக்கொண்டே அறிதுயிலில் உறங்குகின்றது இதோ புன்னைமரத்தின் மலர்களைச் சூழ்ந்துகொண்டு சுரும்புகள் பாடுகின்றன. தும்பிகளும் இசைக்கின்றன. கடல், இந்தப் பாட்டையும் யாழையுங் கேட்டுக்கொண்டு இனிதாய் உறங்குகின்றது. அறிதுயிலின் அறிவு அலை நன்மைதரக்கூடியதாதலின், இந்தக்

கடலின் அலையும் இனிமையாயிருக்கின்றது' என்று நெய்தற் கலியில் வரும் ஒரு கருத்தை விளக்கிக்,

"கருங்கோட்டு நறும்புன்னை மலர்சினை மிசைதொறும்
சுரும்பார்க்கும் குரலினோடு இருந்தும்பி இயைபூத
ஒருங்குடன் இம்மென இமிர்தலின் பாட்டோடு
அரும்பொருள் மரபின்மால் யாழ்கேளாக்கிடந்தான்போல்
பெருங்கடல் துயில்கொள்ளும் வண்டுஇமிர் நறுங்கானல்
(செய். கூ : க-ரு)

என்று அப் பாட்டையும் பாடினேன்.

'இசைகேட்டு உறங்குதலென்பது நல்ல நாகரிக' மென்றார் ஒருவர்.

'அறிதுயிலின் அறிவு அலைபோல, உறக்கத்திலுங் கடல் இனிய அலைகள் வீசிக்கொண்டு உறங்குவதனாலே தான், திருமால் உறங்குதலை உவமை கூறினார்போ லிருக் கிறது' என்றார் இன்னொருவர்.

'ஆமாம், இன்று மதிய நாளாயிற்றே; முழுநிலவில் கடல், பேரலைகளை வீசி மகிழ்ச்சியாய் ஆரவாரிப்பதன்றோ இயல்பு?' என்று மற்றொருவர் ஒரு தடை நிகழ்த்தினார்.

'இது வருந்திக்கொண்டிருக்கிற தலைவியின் பாட்டு; அவள் உள்ளத்துக்கு ஆரவாரிப்பும் உறக்கமாகத்தான் தோன்றும்' என்று நான் ஓர் ஒப்புக் கூறினேன்.

'இன்னும் நிலா நல்ல வெண்ணிறமுற்று மேல் எழ வில்லை. அப்படி எழ எழத்தான் கடல் விழித்துக்கொள் ளும். கடல் இப்போது உறங்கிக்கொண்டுதான் இருக் கிறது. ஆனால் முழுதும் ஆழ்ந்த உறக்கமில்லை; இப்போதே சிறிது ஆரவாரித்துக்கொண்டுதான் இருக்கிறது. அதற் காகத்தான், அறிதுயிலிலுள்ள திருமாலை உவமங்காட்டி யிருக்கிறதே' என்று, குறுநிலமன்னர் சமர்த்தாக ஓர்

அமைதி கூறினர். அவர் அப்படிச் சொன்னது எல்லார்க்கும் மகிழ்ச்சியாயிருந்தது;

'ஏன், இவரே ஒரு புலவர்தான்' என்றார் ஒருவர்; எல்லார்க்கும் 'கொல்'லென்று சிரிப்பு வந்துவிட்டது.

அதற்குள் ஒருவர், 'உலகம் அதன்பாட்டுக்கு இருக்கிறது, இயங்குறகிது; அறிஞர்கள் அவர்கள் அறிவின் றிறத்துக்குத் தக்கபடி கற்பித்து மற்றவர்களை மகிழ்விக்கிறார்கள்' என்றார்.

'இல்லாவிட்டால் உலகத்தில் இன்பமேது? இந்த அறியாமைப் பொருள்களோடு அறிவு கலக்கும்போது தான் இன்பம்' என்று நான் சொன்னேன்.

அப்படியானல், 'இந்தக் கதிரவன், நிலா, கடல், கழி, கானல். சோலை, காற்று, குருகு, அன்றில், மீன், சுறா, மக்கள் என்று உலகிற் காணப்படும் இவற்றின் காட்சிகள் செயல்கள் முதலியவற்றோடு அறிஞர்கள் தம் அறிவையுங் கலந்து குழைத்து இட்ட சித்திரங்களென்றே இப் பாட்டுக்களைச் சொல்லவேண்டும்; நமக்கு இவை எவ்வளவோ எழுச்சியும் இன்பமுந்தான் தருகின்றன' என்றார் மற்றொருவர்.

'உண்மை; நெய்தற்கலியைப் படித்தால், கடலும் கடல் சார்ந்த நிலமுமென்றுள்ள இந் நிலப்பரப்பைப்பற்றி என்னென்ன வகையாக இன்பமாய்ப் பேசலாமோ அவை பெரும்பாலும் அதிலிருக்கப் பார்க்கலாம்' என்று நான் கூறினேன்.

'கட்டாயம் படிக்கவேண்டியதுதான்; நம் குறுநில மன்னர் நெய்தல் நிலத்துத் தலைவராயிருப்பதனல், இங்குள்ள காட்சிகளைப்பற்றி அடிக்கடி இன்பமாய்ப் பேசி மகிழ்வதற்கு அது மிக உதவியாயிருக்கும்' என்று எல்லா

ரும் ஒருவரை யொருவர் பார்த்துக்கொண்டு ஒருமுகமாகச் சொன்னார்கள்.

இரண்டொரு கணம் எல்லாரும் சும்மா இருந்தோம். இதற்குள் குறிஞ்சி மன்னர், 'நிலவு நன்றாய் எழுந்துவிட்டது. கடலின் ஆரவாரம் இப்போது மிகுதியாயிருக்கிறது' என்றார்;

'கடல் உறக்கத்திலிருந்து விழித்துக்கொண்டது போலும்' என்றார் ஒருவர்;

'நாம் இப்படிச் சொன்னாற் போதாது; இன்னும் அதை அழகுபடுத்திச் சொல்லவேண்டும்; நெய்தற்கலியில் ஒரு பாட்டுக் கிடைக்குமானால் நமது ஆர்வத்தை அது நிரப்பக்கூடும்' என்று மற்றொருவர் சொல்ல, எல்லாரும் என் முகத்தை நோக்கினார்கள்.

'ஆம், எழுச்சியான இந்த நேரத்தில் உறக்கப் பாட்டுகள் கூடா; விழிப்புப் பாட்டுகளே வேண்டும்; அதுவும் மும்முரமாய்ச் செயல்புரியும் பாட்டுக்களே இன்றியமையாதன' என்று சொல்லி,

'இப்போது அலைகள் உயரமாய் எழுந்திருக்கின்றன; கரையிலுள்ள மணற்குன்றுகளின் உச்சியில் வந்து அவை இடிக்கின்றன. அதனால் அந்த அலையை ஒரு மதயானை போலச் சொல்லலாம். தன் துணையோடுகூடிய வெண் சங்குகள் அலைகளில் மோதுண்டுவந்து மணற்குன்றில் உறுத்து விழுகின்றன. அவையே அந்த யானைக்கு இரண்டு பக்கமுமுள்ள இரண்டு கொம்புகளாகும். காற்றே பாகன்; அலையோசையே யானையின் முழக்கம். இப்படி இந்த அலையாகிய யானை இந்த இரவில் மிக ஆரவாரிக்கின்றது.'

என்று நெய்தற்கலியில் (௧அ) வருகின்ற ஒரு பாட்டின் பொருளைமட்டும் எடுத்துக்கூறி, 'அலை, தன்னால்

உருவாக்கப்பட்ட மணற்குன்றைத் தானே வருத்து கின்றது; அதுபோலத் தலைவனால் வாழ்வு தரப்பட்ட தலைவியைத் தலைவனே பிரிந்து வருத்துகின்றான்' என்பது இதன் உட்கருத்து என்று உள்ளுறை பொருளையும் எடுத்துக் காட்டினேன்.

'இல்லாத பொய்களையெல்லாங் 'கற்பனை' என்னும் பெயரால் எடுத்துப் புனையும் பல பிற்காலப்பாட்டுகள் போலல்லாமல், உள்ள மெய்மைகளையே இச் சங்க இலக்கியப் பாட்டுகள் நல்ல அறிவின் திறமாகப் புனைந்து எவ்வளவு மெய்யின்பந் தருகின்றன! 'கற்பனை' என்பது இதுவே. சங்கநூற் பாட்டுகளின் மாட்சிமையே இது' என்று அதன் சிறப்பியல்பையும் நினைவூட்டினேன்.

நெய்தற்கலியைத் தொடர்பாகப் படித்துங் கேட்டும் இன்புறவேண்டுமென்று, அங்கே இருந்தவர்கள் எல்லாருக்குமே பெருவிருப்பம் உண்டாய்விட்டது.

எங்கள் படகு திருப்பப்பட்டது. குறுநில மன்னர் முன்னே நான் சொன்ன 'அருளினகோல் தோழி அருளின கோல் தோழி' என்னும் ஊசற் பாட்டைப் பண்முறையிற் பாடும்படி உடன்வந்த இசை நண்பர்களைக் கேட்டுக்கொண்டார். நானும் எழுதிக்கொடுத்தேன். முன்போலவே மின்விளக்கின் துணைகொண்டு நண்பர் இருவரும் மாறி மாறி மிக அழகாகப் பாடினார்கள். அந்தப் பாட்டு குறுநில மன்னர் உள்ளத்தைப் பெரிதுங் கவர்ந்தது; 'வீட்டுப் பெண்கள் நல்ல தமிழறிவு வாய்ந்து இன்னிசையுணர்வோடு இதுபோன்ற சங்கப் பாட்டுகளைப் பாடி மகிழ்ந்தால், எவ்வளவு நன்றாயிருக்கும்' என்று அவர் சொன்னார்.

## 6. சில பயன்தருங் கருத்துகள்

பிறகு அவர்க்கோர் எண்ணந் தோன்றிற்று. நெய்தற் கலியிலேயே அவர் உள்ளம் பிணிப்புக்கொண்டுவிட்டது. நெய்தற் கலியைப் பயில்வதனால், இப்படி ஓர் இன்பப் பயன் இருப்பது நல்லதுதான். ஓய்வு காலங்களிலும், மனச்சோர்வு உண்டாகுங் காலங்களிலும், மகளிர் நண்பர் முதலியவர்களோடு இன்பம் நிகழ்த்துங் காலங்களிலும், இவைபோன்ற பிறகாலங்களிலும் பயன்படும். மற்றப்படி இன்னும், வேறு வாழ்க்கைமுறைகட்குப் பயன்படக் கூடிய கருத்துகள் அக் கலிப்பாட்டுகளிற் கிடைக்கக் கூடுமா?" என்று உன்னிப்பாகக் கேட்டார். அவர்க்குச் சில குறிப்புகள் கொடுக்கவேண்டுமென்றே என் மனத்தி லும் பட்டது. இதற்கு நான் எப்படி வழிவிடுவேனோ என்று மற்றவர்களும் எதிர்பார்த்தார்கள். பின்வருமாறு சொன்னேன்:

சங்க நூல்கட்கே ஒரு தனிச் சிறப்பு உண்டு. உலக இயற்கையையும் மக்களியற்கையையுங் கூர்ந்து கூர்ந்து ஆழ ஆராய்ந்து, புலப்பட்ட உண்மைகளைப் புலப்பட்ட வாறே, உள்ளக் கிளர்ச்சியுடன், அக்கிளர்ச்சி தோன்ற வெளியிடுவதென்பது. இதனாற் பொருளின் இயற்கை களும் மக்களின் இயற்கைகளும் நமக்கு உள்ளவாறே தெரிந்துவிடும். அக் கருத்துகள் நம் வாழ்க்கையின் பல துறைகட்கும் பல வகைகளிலும் பயன்படக்கூடும்.

நெய்தற்கலியில், "நீடிலைத் தாழை" (உஎ: உஎ), "கமழ் ஞாழல் வீ ஏய்ப்ப........மேனி சிதைத்தான்" (கஒ; ககூ-உ0), "பிணங்கு இரு மோட்ட திரை" (கச: ௩அ), "கொல் ஏற்றுச் சுறவு" (கூ: கூ), "தலை சாய்த்து மரம் துஞ்ச" (உ: கூ) எனப் பல தொடர்கள் வருகின்றன.

இவை முறையே 'தாழை மரத்தின் இலை நீண்டிருக்கும்' என்பதும், 'ஞாழல் என்னும் மலர் ஒரு மணமுள்ள மலர்; அதன் நிறம் மகளிரின் பசலை நிறம்போலிருக்கும்' என்பதும், 'கடல் அலைகள் ஒன்றோடொன்று பிணங்கிக்கொண்டு வரும்; கருமையாகவும் பெரிதாகவும் இருக்கும்' என்பதும், 'சுறவின் ஆண்மீன் மக்களையுங் கொன்றுவிடக்கூடிய அத்துணை வலிமை வாய்ந்தது' என்பதும், 'செடி கொடிகளும் மரங்களுங்கூட மற்ற உயிர்களைப்போலவே தலையைச் சாய்த்துக்கொண்டு உறங்குவதுண்டு' என்பதும் உணர்த்தும். இவற்றால், பொருள்களின் இயற்கைகளையும் மற்ற உயிர்களின் இயற்கைகளையும் நாம் அறிந்துகொள்ள வழியுண்டு.

இன்னும், பழங்கால வாழ்க்கை யியல்புகள் சில அங்கங்கும் வருகின்றன. இக்கால வாழ்க்கையியல்புகள் சிலவற்றைச் செப்பஞ் செய்துகொள்வதற்கும் அவை உதவக்கூடும். பண்டைக்காலத்திற் பெண்கள், 'அழகிருந்து அன்பில்லாமலும், அன்பிருந்து அழகில்லாமலும் இருக்கக் கூடாது; இரண்டும் உடையவர்களா யிருக்கவேண்டும்' என்னும் நோக்கமுடையவர்களா யிருந்தார்கள் என்னுங் குறிப்பு, "மாண் எழில் மாதர் மகளிர்" (ரு: அ) என்பதனால் தெரிகின்றது. இப்படிப் பல குறிப்புகள் வருகின்றன.

## 7. அறநெறிக் கருத்துகள்

இன்னும், மக்கள், மற்றவர்களோடு எப்படி எப்படி ஒழுகிக்கொண்டால் உலகவாழ்க்கை இன்பமாய் எளிதாய் நடைபெறும் என்பது குறித்தும் பல அறிவுரைகள் நெய்தற்கலியில் வருகின்றன. மிக அழகழகாக வருகின்றன. நேர்முகமாகச் சொன்னால் உள்ளம் நோவுமென்று கருதியும், விளக்கமாகத் தெரியாதென உன்னியும் நல்ல நல்ல

இடமறிந்து பல உவமைகள்வாயிலாக நன்றாய் விளக்கப் பட்டிருக்கின்றன. தகுதியுள்ளவன் ஒருவன், இயல்பில் ஒருவரிடம் கைநீட்டி இரக்கக்கூடாதவனாயிருந்தும் தனது கொடிய வறுமையினால் இரக்க நேரும்போது அவனுள்ளம் எவ்வளவு ஆற்றல் அடங்கி மெலிந்துவிடுகிறது என்னும் உண்மையைப், பகலெல்லாம் ஒளிவிளக்கத்தோடு ஆண்மை யாய் விளங்கிய மரங்கள், மாலையில் அவ்வொளியடங்கிப் பொலிவிழந்து விட்டதனோடு ஒப்பிட்டும்; அப்படிப்பட்டவ னது அருமையறியாமற், பொருளுடையவரிற் சிலர் வள்ளன்மையின்றித் தம் பொருள்களை மறைத்துக்கொள் ளுங் குவிந்த நெஞ்சுடையவர்களா யிருக்கின்றார்கள் என்னுங் கருத்தை அந்த மாலைக்காலத்து மரங்களிலுள்ள இலைகள் குவிந்து காணப்படுவதனோடு உவமித்தும் ஓரிடத் தில் (கூ; ச-சூ) இந் நெய்தற்கலி எடுத்துக் காட்டுகிறது. பொருளுடையவர்கள் மற்றவர்களோடு செவ்வையாய், உதவியாய், நடந்துகொள்ளாமையால் எத்தனையோ அரு மைத் திறம் வாய்ந்தவர்க ளெல்லாரும் உள மெலிந்து வீணாய்விடுகின்றார்க ளென்பதும், பொருளை மறைப்பவர் களுக்கு உள்ளம் விரிவுபடாது கூம்பி அவர்களும் வீணாய் விடுகின்றார்களென்பதும் இதனால் அறியப்படுகின்றன. இப்படி இருதிறத்தாரும் மங்கிக் குன்றிவிட்டால், பொது வில் உலகவாழ்க்கையும் இனிது நடைபெறாமல் பொன்றிப் போகுமன்றோ? ஆகவே, வாழ்க்கை முறையை அறிய வேண்டியவர்கட்கு இதுவும், முதன்மையானதென்று உன் னித்து, ஒரே இடமாய் ஒரே பொருளோடு உவமித்து நன்கு விளக்கப்பட்டிருக்கின்றது.

இன்னும், மக்கள், தமது உயர்ந்த பிறவிக்கேற்ப எவ் வெவ்வாறு நடந்துகொள்ளவேண்டும்? அதற்குரிய குணங்

களின் இயல்புகள் என்ன? என்பது நெய்தற்கலியில் ஒரே இடமாகத் தொகுத்துரைக்கப்பட்டிருக்கின்றது; அதனை அறிந்தால் நீங்கள் மிகவும் மகிழ்வீர்கள்; அது:

"ஆற்றுதல் என்பது ஒன்று அலந்தவர்க் குதவுதல்;
போற்றுதல் என்பது புணர்ந்தாரைப் பிரியாமை;
பண்பு எனப்படுவது பாடுஅறிந்து ஒழுகுதல்;
அன்பு எனப்படுவது தன்கிளை செறுஅமை;
அறிவு எனப்படுவது பேதையார் சொல்நோன்றல்;
செறிவு எனப்படுவது கூறியது மறுஅமை;
நிறை எனப்படுவது மறைபிறர் அறியாமை;
முறை எனப்படுவது கண்ணோடாது உயிர் வெளவல்;
பொறை எனப்படுவது போற்றாரைப் பொறுத்தல்;"

(செ. கரு : கூ-கச)

என்பது. இந்தப்படி வாழ்க்கை முறையைக் கூடிய வரையில் அமைத்துக்கொண்டு தகுந்தவர்களெல்லாரும் ஒழுகினால், உலகியல் எவ்வளவோ நன்றாயிருக்கும். உலகத்தில் வாழ்வதென்பது, ஒழுங்கான முறையில் இன்பத்தை உருவாக்குதல் என்பதுதானே.*

இப்படி வாழ்க்கைக்குப் பலதுறைகளிலும் பயன்படக்கூடிய கலை, பொருள், வாழ்க்கைநுட்பம் முதலிய கருத்துக்களையெல்லாம், சங்க நூலாசிரியர்கள், தம் பாட்டுக்களில் 'அங்கங்கும் இடமறிந்து அடைமொழிகளிலும், உவமைகளிலும், பிறவிடங்களிலும், தனி நிலைகளிலும் வைத்து விளக்குகிறார்கள். நெய்தற்கலியில் எவ்வளவோ கருத்துநுட்பங்கள் இவைபோல உண்டு; இன்னுஞ் சில சொல்லட்டுமா?' என்றேன்.

---

*Theories of John Amos Comenius.

நாங்கள் ஏறியிருந்த படகு, நாங்கள் ஏறவேண்டிய துறைக்கு வந்துவிட்டது; எல்லோருங் கரையேறித் தங்கு மாளிகையை நோக்கித் தோட்டந் தோட்டமாகக் கடந்து நடந்தோம். சிறிது தொலேவே யிருந்தமையாலும், நிலவா யிருந்தமையாலும் இவ்வளவு நேரம் படகில் உட்கார்ந்திருந் தமையாலும் எங்களுக்கு அப்போது நடப்பது மகிழ்ச்சி யாகவும் ஆறுதலாகவும் இருந்தது.

குறுநில மன்னர், 'நெய்தற் கலியில் இக்கால வாழ்க் கைக்குப் பயன்படக்கூடியபடி எவ்வளவோ நுட்பங்கள் இன்னும் இருக்குமென்றுதான் தோன்றுகிறது; இனி நான் முடிவாக அக்கலியைப்பற்றி உங்களே ஒன்று கேட் கலாமென்றிருக்கிறேன். நம் மாளிகைக்குச் சென்று சிறிது இளேப்பாறி உணவு கொண்டபின் அதைப்பற்றிப் பேசலா மென்று தோன்றுகின்றது' என்றார்.

மாளிகைக்கு வந்தோம்; தோட்டமும் நிலவும்காற்றும் அந்தப் பரந்த மணல்வெளியும் மிக்க மனக் கிளர்ச்சியைத் தந்தன. களேப்பென்பதே தோன்றவில்லே. அந்த நில வொளி படிந்த மணல்வெளியிற், பிரம்பினாலான சாய்வு நாற்காலிகள் சில, எங்களுக்கென முன்னரே எடுத்துப் போடப்பட்டிருந்தன. குறுநில மன்னரைப் பார்க்க விரும்பிக் குடிமக்கள் சிலர் வந்திருந்தார்கள். சுருக்கமாக அவர்களோடு சில பேசி மறுநாட்காலேயிற் பார்க்கும் ஏற்பாட்டுடன் அவர் அவர்களுக்கு விடைகொடுத்தனுப் பியபின், எல்லாரும் உணவெடுத்துக்கொண்டோம். எனக்கு அவர் இராக்காலங்களில் வழக்கமாகத் தருவது போலவே அன்றும் சில மலேவாழைப் பழங்களேத் தனியாக ஒரு சிறிய வாழையிலேயிலும், நன்றாய்க் காய்ச்சிச் சர்க்கரை யிட்ட ஆவின்பாலே ஒரு வெள்ளிக் குவளேயிலும் தந்தார். உணவு ஆனபின், எல்லாரும் சாய்வு நாற்காலிகளில்

அமர்ந்திருந்தோம். எல்லார்க்கும் வெற்றிலை பாக்குகள் அளிக்கப்பட்டன. நான் வெற்றிலை போடுவதில்லை யென்பது அவர்க்குத் தெரியுமாதலால் எனக்குத் தர வில்லை. இடைக்கழி நாட்டில் எனக்கு நண்பர் பலர் உண்டு. தற்செயலாய் இரண்டு மூன்றுபேர் அங்கு வந்திருந்தார்கள்.

மணி பத்து இருக்கும். அதன்மேல் நான், குறுநில மன்னரை நோக்கி, 'நீங்கள் ஏதோ முடிவாகக் கேட்க வேண்டுமென்று சொன்னீர்களே; அதனைச் சொல்லவேண் டும்; எனக்குத் தெரிந்ததைக் கூறுகிறேன்' என்றேன்.

அவர், 'பழைய தமிழ்நூல்களிற் பெரும்பாலுங் காத லொழுக்கம்பற்றியே பேசப்படுவது ஏன்? வாழ்க்கை யின் நோக்கம் வேறொன்றுமில்லையா? 'நெய்தற்கலி' என் பதன் பெயர்க்காரணமும் அதன் சிறப்பியல்பும் என்ன? என்பவைபற்றித் தெளிவாகத் தெரிந்துகொள்ளவேண்டு மென்பது என் கருத்து' என்று ஆணித்தரமான நல்ல கேள்விகளையே கேட்டார். அவர் அறிவின் நுட்பத்திறம் காண எனக்கு மிக்க வியப்பும் மகிழ்ச்சியும் உண்டாயின. ஆனால், மிக உயர்ந்தவையும் மிக நுண்ணியவையுமான இந்த ஐயக் கருத்துகளுக்குத், தெளிவு தரத்தக்க விடைகள் சொல்லவேண்டிய பெரும் பொறுப்பும் எனக்கு உண்டாய் விட்டது. ஏதோ கீழ்வருமாறு சொன்னேன்.

## 8. வாழ்க்கையின் நோக்கம்

முதலில் வாழ்க்கை என்பதே என்ன என்று தீர்மா னிக்க வேண்டியிருக்கிறது. பொதுவாக, மக்கள் ஐம்புல இன்பங்களைத் தேடுவதிலேயே எண்ணமும் முயற்சியும் உள்ளவர்களாய்க் காணப்படுகிறார்கள். ஐம்புலன்களுக்கும் உண்மையில் இன்பந் தருவது எது என்று, பார்க்க

வேண்டும். முதலில், 'பார்வையின்பம்' என்னும் ஒரு புல னின்பத்தை எடுத்துக்கொள்வோம். அது, சில படங்களைப் பார்த்து இன்பம் தேடக்கூடும். படம் நல்ல அறிவாளி யால் எழுதப்பட்டிருந்தால், அது பார்ப்பதற்கு இன்பந் தரும். அறிவில்லாமற் குழப்பி எழுதியிருந்தால் இன்பந் தரவில்லை; அப்படியானால், அந்தப் படத்தில் அமைந் திருக்கும் அறிவான அமைப்புதான் இன்பந்தருகின்றது என்று துணியவேண்டி யிருக்கிறது. சாயம், கடிதம், சட்டம் முதலியன அதற்குத் துணை செய்கின்றன எனலாம். முதன்மையானது அறிவுதான்; இப்படியே, அறிவாக ஒருவர் பாடினால், அறிவாக ஒருவர் பேசினால் இன்புறுகிறோம். எல்லாப் புலன்களுக்கும் இதே நிலை தான். ஆகவே, மக்கள் புலனின்பம் தேடுகிறார்களென் றால், புலன் வாயிலாக அறிவின்பமே தேடுகிறார்கள் என்பது கருத்தாகின்றது. இதனால், 'மக்கள், எங்கும் அறிவுநிலையை உயர்த்த வேண்டியவர்களாயிருக்கிறார்கள்' என்பது தெரிகின்றது.

இனி, நல்ல அறிவாளிகளாயிருப்பவர்களிடம்போய்ப் பழகி அந்த அறிவுநிலையைப் பெறலாமென்றால், அவர் களுக்கு நம்மிடம் அன்பு அருள் இரக்கம் முதலியன தோன்றினால் மட்டுமே அது கைகூடுவதாயிருக்கிறது. அப்போதுதான் அவர்களை நாம் அணுகுவதற்கே இட முண்டு. இதனால் என்ன தெரிகிறது? 'அறிவுமட்டும் போதாது; ஒருவரையொருவர் அணுகுங் குணமான நட்பும், அது வலுப்பெறுதற்குரிய அன்பு அருள் முதலி யனவும் மக்கள் தேடவேண்டியவர்களாயிருக்கிறார்கள்' என்பது தெரிகின்றதன்றோ!

ஆகவே, உலகத்தில் நாம் நல்ல இன்பம் அடைய வேண்டுமானால், அறிவு, அன்பு முதலான நிலைகளை ஓங்கச்

செய்யவேண்டும் என்பது பெறப்படும்; படவே, அதன் பொருட்டே இந்த உடம்பும், இந்த உலகப்பொருள்களுங் கருவிகளாக இருக்கின்றன என்பதும், அவற்றோடு கூடி நாம் வாழ்வதெல்லாம் இந்த உள்ளுணர்வுகளைப் பெருக்கு வதற்காகத்தான் என்பதும், இதுவே உலகவாழ்க்கையாம் என்பதும் நாம் ஒருவாறு தீர்மானிக்கலாம்.

## 9. காதல், மனவுணர்வை நுட்பமாக்குதல்

இந்த உள்ளுணர்வுகள் பெருகப் பெருகப் புலனின்ப மும் அப்போது பெருகும். புலன்கள் அப்போது அந்த உள்ளுணர்வுகளின்வழியே நடைபெறும். இங்ஙனம் செய்தற்கு, நமக்குக் கிடைத்திருக்கும் இயற்கை அமைப்பு என்ன? நம்மைச் சூழப் பல உலகப்பொருள்கள் இருக் கின்றன. பல உயிர்களும் இருக்கின்றன. உலகப்பொருள் களையெல்லாம் உன்னிப் பார்த்தால், ஒரு நல்ல வேறுபாடு பிரிந்து தெரியும். என்ன அது? ஒன்று: வன்மையான பொருள்கள். இன்னொன்று: மென்மையான பொருள் கள். இப்படியே எல்லா உயிர்ப்பொருள்களிலுங்கூட ஒரே வேறுபாடு காணப்படுகிறது. என்ன அது? ஆண் என்பதும், பெண் என்பதும்; நம்மைச் சூழ்ந்துள்ள பொருள்களில் இப்படி ஒரு வேறுபாடு தோன்றுவது நமக்கு வியப்பாயில்லையா?

முன்னே சொன்ன வன்மை மென்மையுள்ள அறி யாமைப் பொருள்களைப்பற்றிப் பேசவேண்டுமானால், இனி நாம் ஆண் உடம்பு பெண் உடம்பு என்னும் இவ்வுடம்பு களையே எடுத்துக்கொள்ளலாம்; ஏனென்றால், ஆணுயிரின் உடம்பு வன்மை வாய்ந்தது; பெண்ணுயிரின் உடம்பு மென்மை வாய்ந்தது; இவ்வுடம்புகளும் அறியாமைப் பொருள்களே. ஆகவே, அறியாமைப்பொருள் 'அறிவுப்

பொருள் என்னும் பாகுபாட்டிலுள்ள இந்த உலக மெல்லாம், இப்போது ஆண் பெண் என்னும் இரண்டே வேறுபாட்டில் வந்து அடங்கிவிட்டன என்னலாம். எனவே, உலகம் என்றால், ஆண் பெண் என்னும் பேச்சுக்கே இடமாயிருப்பதால் வியப்பொன்றுமில்லை. இயற்கையே அமைந்த படைப்பு இது.

வாழ்க்கை என்பது அன்பு முதலான உள்ளுணர்வு களை மிகுத்து இன்புறுவதேயாம் என்பது மெய்யானால், அந்தக் கொள்கை, இயற்கையே அமைந்திருக்கும் இந்த ஆண் பெண் படைப்பினாலல்லாமல் வேறுவழியில் நிறை வேறுதற்கு இடமேது? அந்த நோக்கத்தை ஒழுங்காக நிறைவேற்றிக்கொள்ளும்படி கற்பிப்பதே அகப்பொருள் நூல்களின் நோக்கம்.

மனம் பண்பட்டால்மட்டுமே, இந்த உள்ளுணர்வுகள் ஸ்க்கூடும். மனம் பண்படுவதென்பது, அது மென்மைப் படுவதுதான். அதாவது நுட்பப்படுவது. மனமோ, புலன் களைப்பற்றி நிற்கும். புலன்கள் வெளிப்பொருளகளிடம் பாயும். இப்போது, மனத்தை நுட்பப்படுத்துவதென்றால், புலனுணர்வுகளை முதலில் நுட்பப்படுத்தவேண்டும். புல னுணர்வுகள் நுட்பமுற, அவை பற்றும் அறியாமைப் பொருள்களான புறப்பொருள்கள், நுட்பமுள்ளவையா யிருக்கவேண்டும். அஃதாவது, மென்மையுள்ளவையா யிருக்கவேண்டும். அவை தாமும், மென்மையான உணர் வோடு கூடிய பொருள்களாயிருந்தால் இன்னும் நல்லது. உணர்வோடுகூடிய மெல்லிய புறப்பொருள்கள் எவை? அவையே உடம்புகள். ஓர் ஆணுடம்பின் புலன்கள், உணர் வோடுகூடிய மெல்லிய பெண்ணுடம்போடு தொடர்பு கொள்ளும்போது, அப்புலன்கள் இருபக்கமும் நுட்ப மடைகின்றன. பெண்ணின் புலன்கள், வன்மையான

ஆணுடம்போடு பொருந்தும்போது அப்பெண்ணுயிர் தனது மென்மையை அவ்வாண்புலன்கள் நுகர்வதற்குத் தருவதாக நினைக்கின்றது எனப்படுதலின், அந்நினைவே அப்பெண்ணுடம்பின் புலன்களையும் நுட்பமாக்குகின்றது. இப்படிப் புலன்கள் நுட்பமடைதலே மெல்லெனத் தழுவுதல், நீவுதல் முதலியனவும், மெல்லெனச் சுவைத்தல், குளிர்ந்து பார்த்தல் முதலான ஏனைப் புலன் நிகழ்ச்சிகளுமா மென்பது.

காதற் களவொழுக்கத்தைச் சிறப்பிப்பதற்குக் காரணம், இப்படிப் புலனுணர்வுகள் நுட்பமடையும்பொருட்டு, உண்மையான உணர்வுள்ள வுடம்புகள் தேவையென்பதனாலேதான்.

புலன்கள் இங்ஙனம் நுட்பங்கொள்ளவே, அவற்றைப் பற்றிய மனமும் நுட்பங்கொள்ளும்; விரியும்.* மனம் இங்ஙனம் பண்பட்டு நுணுக, உயிர்த்தன்மைகளான அன்பு முதலிய உள்ளுணர்வுகளும் மிகும்; அவை மிக இன்பம் மிகும்.

மனம் நுணுகவேண்டிய அளவுக்கு நுணுகிவிட்டால், அப்புறம் அது பருப்பொருள் நுகர்ச்சியை நாடாது; அப்போது புலன்களுக்கும் வேலையில்லை. அப்போது காதலர்களுள்ளும் புறவுடம்பின் தொடர்புக்கு இடமிராது. கைகால் முதலிய உறுப்புகள் ஒருவருக்கொருவர் உதவுவதற்குத்தான் பயன்படும். இதுவே இயற்கை முறை.

இதற்கு, முதலில் ஆண் பெண் புலன்கள் ஒன்றும்போது, வெறும் இன்பமென்று நினையாமல், தத்தம் புலன்களும் மனமும் மென்மையடைகின்றனவென்று காதலர்கள் கருதவேண்டும். அப்போது, அதுவே அருள்நிலைக்கு

* Prof. W. F. Berrett's Psychical Reserch.

உய்க்கும். அவரவர் அன்பையும் நன்மைகளையும் நினைக்க, அங்ஙனம் கருதும் இயல்பு தானே உண்டாகும். அப்போது உடம்பும் உயிருமெல்லாம் தாமே உருகி மென்மையடையும். இவ்வுண்மைகட்கெல்லாம் நெய்தற்கலியில் நிரம்பச் சான்றுகளிருக்கின்றன. (செய். ௬, ௭, ௯, ௨௧, ௨௪, ௨௬ முதலியன) பொருளிலக்கணத்தில், இங்ஙனம் அன்பினால் உடம்பு குழைந்து மென்மைப்பட்டுப் புலன்களும் உள்ளமும் நுட்பமடைதல், 'மெய்ப்பாடு' என்பதனுள் வரும்.

## 10. நெய்தலின் சிறப்பியல்பு

இனி, இவ்வாற்றாற் பெருகும் உள்ளுணர்வுகளெல்லாம் ஐந்து வகைப்படும்; அவை அறிவு, நட்பு, அன்பு, அருள், இரக்கம் என்பன. அறிவு என்பது ஊடுதல்; நட்பு என்பது கூடுதல்; பிரிவு காரணமாக அருள் தோன்றும்; பிரிந்த தலைவனுக்காகக் காத்திருப்பது அன்பினாலேதான் முடியும். ஆற்றாமை மிகுதியானால் இரக்கவுணர்வு உண்டாகும். 'நெய்தல்' என்னுஞ் சொல்லுக்கு 'உருகுதல்' என்பது பொருள். நெய்தல் உணர்ச்சியைக் கலிப்பாட்டிற் பாடியிருப்பதனால் 'நெய்தற் கலி' எனப்பட்டது. அக்கலியில் வரும் ௨௫-ம் பாட்டு முதல் ஆறு பாட்டுகள் இவ்வுணர்ச்சியை நன்கு விளக்கக்கூடியவை. உள்ளுணர்வுகளிற் கடைசி உணர்வு உருக்கவுணர்வுதான். அந்நிலை வரையில் உள்ளம் உயர்ந்து நுணுகிவிட்டால், அதன்பின் அதனையுடைய உயிர் தூய்தாய் ஒளிவிளங்கி நிலையான பேரின்பத்துள் நுழைய முற்படும்; இதனால் 'நெய்தற்கலியின் சிறப்பு ஒருவாறு புலப்படக்கூடும்' என்று சொல்லி நிறுத்தினேன்.

எல்லாரும் உன்னிப்பாய்க் கேட்டுவந்தார்கள். குறு நிலமன்னர் 'எனக்கு ஒருவகையாக உங்கள் விடைகள் அமைதியுண்டாக்கியிருக்கின்றன' என்று சொல்லி, 'நெய்தற் கலி'யை நல்ல முறையிற் பயிலவேண்டும்' என்று தமது நன்றியுணர்வை ஒளிபெற்ற கண்களுடன் புலப் படுத்தினர்; அந்த நெய்தல் நிலத்து நிகழ்ச்சி இன்னும் என் மனக்கண்ணின்முன் ஒரு படக்காட்சிபோலவே விளங்குகின்றது.

---